TAMIL HIGHLIGHTS A. RAJAVEERAN.
16.8.76.

# கிறிஸ்துவின் வாழ்க்கை வரலாற்றில் காணப்படும் உன்னத சம்பவங்கள்

## பாடப் புத்தகம்

ஆக்கியோன்:
K.E. வைகல்

INTERNATIONAL CORRESPONDENCE INSTITUTE
POST BOX 5036 BANGALORE - 560 001

## இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் அன்பின் வாழ்த்துக்கள்

ஏறக்குறைய 7 ஆண்டுகளாக பல இடங்களிலிருந்து சேகரித்த சுமார் 200 ஆண்டுகளுக்கு முன்பு வரை அச்சடிக்கப்பட்ட, ஆரோக்கிய உபதேசங்கள் அடங்கிய, கிறிஸ்தவ ஆவிக்குரிய புத்தகங்களை, பல மணி நேரம் கொடுத்து, பல இலட்சங்கள் செலவு செய்து மின் நூல்களாக (E-Books) இலவசமாக (மத்தேயு 10:8) உங்கள் கரங்களில் கொடுப்பதற்கு, அற்பரும் நீசருமான எங்களை பயன்படுத்தின உன்னத தேவனுக்கே சகல கனமும் மகிமையும் துதியும் உரித்தாவதாக. இதைப் போன்ற இன்னும் ஆயிரக்கணக்கான புத்தகங்களை தரவிறக்கம் (Download) செய்ய எங்களுடைய இணையதளத்தை சொடுக்கவும்/பார்க்கவும்: www.WordOfGod.in

95 சதவீத புத்தகங்கள் அச்சில் இல்லாதவைகளும், காப்புரிமை முடிந்தவைகளுமே. மீதமுள்ள புத்தகங்கள், நல்ல உபதேசங்களை கொண்டிருப்பதால், முடிந்தவரை ஆசிரியரின் உரிமையோடு மின்-நூலாக, இலவசமாக வெளியிடுகிறோம். ஒருவேளை உங்களுடைய புத்தகம் இப்படி இலவசமாக மின்-நூல் (E-Book) வடிவில் வரக்கூடாது என்று நினைத்தீர்களானால், தயவு செய்து எங்களை மன்னித்துக்கொள்ளுங்கள். எங்களுடைய WhatsApp எண்ணிற்கோ, மின் அஞ்சலிலோ (Email) எங்களுக்கு தெரியப்படுத்துங்கள். உடனடியாக எங்களுடைய இணைய-தளத்திலிருந்து எடுத்துவிடுகிறோம்.

WhatsApp/SMS: +91 90 190 490 70 / +91 7676 50 5599
Email: wordofgod@wordofgod.in

## *Wishing you in the mighty name of Jesus Christ*

*We had collected several thousands of old Tamil Spiritual Books which are rich in Sound Doctrines across various places of India for 7 years. Some of them are more than 200 years old books. We have spent millions of hours and money in scanning them and coverting them to E-Books. The work is still in progress. These E-books are published completely free of cost (Matt 10:8) forever. We give all the praise and glory to God for giving this wonderful opportunity to server Him. You can download thousands of similar Tamil Christian E-books from our website www.WordOfGod.in completely free of cost at any time.*

*95% of these E-Books are not being printed now and their copyrights are already expired. The remaining books are sent as E-Books mostly with the permission from the Authors. If you feel that your books should not be published as E-Book freely, kindly execuse and forgive us. Please let us know the book details by WhatsApp or Email we will remove them from our website.*

WhatsApp/SMS: +91 90 190 490 70 / +91 7676 50 5599
Email: wordofgod@wordofgod.in

A Raja Veeran.
16.8.76.

# கிறிஸ்துவின் வாழ்க்கை வரலாற்றில் காணப்படும் உன்னத சம்பவங்கள்

## பாடப் புத்தகம்

ஆக்கியோன் : K. E. வைகல்

# பொருளடக்கம்


| பாடம் | | பக்கம் |
|---|---|---|
| 1. | இயேசு--தேவன் தந்தருளின மாபெரும் பரிசு | 1 |
| 2. | இயேசு கிறிஸ்துவைப் பற்றி தீர்க்கதரிசிகள் உரைத்தது என்ன? | 4 |
| 3. | கன்னித் தாயாகிய மரியாள் -- | 10 |
| 4. | ஒரு கிராமத்துப் பெண்ணுக்கு இயேசுவின் உபதேசம் | 16 |
| 5. | ஐசுவரியவனாகிய வாலிபத்தலைவனுக்கு இயேசுவின் உபதேசம் ---- --- | 21 |
| 6. | இயேசு மாபெரும் வைத்தியர் -- | 26 |
| 7. | தேவன் கேட்பது என்ன என்று இயேசு கூறுதல் | 32 |
| 8. | ஒரு தகப்பன் தன் மகனை மன்னித்தல் | 38 |
| 9. | இயேசுவின் நியாயம் விசாரிக்கப்படுதலும் சிலுவையிலறையப்படுதலும் --- | 45 |
| 10. | உயிர்த்தெழுந்த இயேசு | 51 |


---


இன்டர்நேஷனல் கரஸ்பாண்டன்ஸ் இன்ஸ்டிடியூட்

தபால் பெட்டி 5036

பெங்களூர்-560001, இந்தியா

# மாணவருக்குரிய குறிப்புகள்

1. ஒவ்வொரு பாடத்திலுமுள்ள கேள்விகள் எல்லாவற்றிற்கும் சரிவர பதில்களை எழுதி பூர்த்தி செய்தபின்பு அடுத்துள்ள பாடங்களைப் படிக்கத் தொடங்குக.

2. பாடங்களில் உங்களுக்கு ஏதேனும் விளங்காமல் இருந்தால் எங்களுக்கு எழுதித் தெரியப்படுத்தவும். நாங்கள் உங்களுக்கு உதவி செய்ய முயற்சிக்கின்றோம்.

3. உங்களுக்கு ஒரு எண் கொடுக்கப்படும். அதுவே மாணவரின் பதிவு எண் அதைப் பத்திரமாக வைக்கவும். மனப்பாடம் செய்து வைத்திருத்தல் நலம். எங்களுக்கு நீங்கள் எழுதும்பொழுதெல்லாம் உங்கள் மாணவரின் பதிவு எண் என்ன என்பதைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும்.

4. உங்கள் நண்பர்களின் பதில்களைப் பார்த்து எழுத வேண்டாம். அப்படிச் செய்யும் பொழுது இதனால் வரும் ஆசீர்வாதத்தை இழந்து விடுகிறீர்கள்.

5. உங்களுக்கு அனுப்பப்பட்டுள்ள பாடங்களில் மட்டுமே பதில்கள் எழுதுங்கள். 'உங்கள் நண்பருக்குக் கொடுக்கவும்' என்பதில் உங்கள் பதில்களை எழுதி அனுப்ப வேண்டாம்.

6. உங்களுக்குப் பாடங்கள் ஒரு மாதத்திற்குள் திரும்பி வராவிட்டால் எங்களுக்குத் தெரிவிக்கவும். கடிதத்தில் உங்கள் மாணவரின் பதிவு எண்ணைக் குறிப்பிட்டு அனுப்புக.

7. இதைப் படிப்பதின் மூலம் நாங்கள் உங்களுக்கு வேலை வாய்ப்பு கொடுப்பதில்லை. இதன் மூலம் நீங்கள் உங்கள் வாழ்க்கையில் தேவனையும் பரிசுத்த வேதாகமத்தையும் அறிந்துகொள்ள வேண்டுமென்பதே எங்கள் நோக்கம்.

8. வெற்றிகரமாக பூர்த்தி செய்யும் மாணவர்களுக்கு ஒரு சான்றிதழ் அனுப்பி வைக்கப்படும்.

9. (a) கீழ்க்கண்ட சுருக்கமான விலாசத்தை எழுதினால் போதுமானது.

   I. C. I. P.O. BOX 5036, BANGALORE-560001

   (b) உங்களுடைய விலாசத்தையும் கவரின் மேல் எழுத மறக்க வேண்டாம். கூடுமானவரை உங்கள் விலாசத்தை ஆங்கிலத்தில் எழுதி அனுப்புக.

(c) உங்களுடைய பாடங்களின் மேல் எப்பொழுதும் மாணவரின் எண் மற்றும் பெயர்களை மாற்றி மாற்றி எழுத வேண்டாம்.

(d) புத்தகத் தபால் மூலம் பாடங்களை அனுப்பும்போது உறையை ஒட்ட வேண்டாம். முதல் 50 கிராம் எடை உள்ளவரை 25 காசு தபால் தலை ஒட்டுக. அடுத்துள்ள 25 கிராம்களுக்கு 10 காசு தபால் தலைகள் கூடுதல் ஒட்ட வேண்டும். சந்தேகங்களுக்கு அருகிலுள்ள தபால் ஆபிசில் விசாரிக்கவும்.

(e) பாடங்களைப் பற்றிய கேள்விகள், கட்டுரைகள், கடிதங்கள் தனியாகக் கடிதத் தபால் மூலம் அனுப்ப வேண்டும். புத்தகத் தபாலில் அனுப்பினால் போதுமான தபால் தலை ஒட்டி அனுப்ப வேண்டும்.

(f) கடிதத் தபால் முதல் 20 கிராம் எடைக்கு 25 காசு தபால் தலை அடுத்துள்ள ஒவ்வொரு 10 கிராம்களுக்கு 10 காசு தபால் தலை கூடுதல் ஒட்ட வேண்டும். சுருக்கமான செய்திகள் அனுப்பவேண்டியிருந்தால் உள்ளூர் தபால் கடிதம் விலை 20 காசு அல்லது போஸ்டு கார்டு 15 காசு விலையுள்ளது உபயோகிக்கவும்.

(g) சரியான தபால் தலைகள் ஒட்டி அனுப்பாத கடிதங்கள் இரட்டிப்புச் சார்ஜ் முத்திரையிட்டு வந்தால் பெற்றுக் கொள்ளாமல் உங்களுக்கே திருப்பி அனுப்பப்படும்.

10. உங்கள் விலாசங்கள் மாறும்பொழுது உடனே எங்களுக்குத் தெரிவிக்கவும். இல்லையென்றால் பாடங்கள் உங்களுக்கு வந்து சேராது. உங்கள் பழைய விலாசத்தையும் மாணவரின் பதிவு எண்ணையும் குறிப்பிட்டு எழுதுக. எப்பொழுதும் உங்களிடத்தின் PIN CODE எண்ணையும் எழுதுக.

---

பாடம் ஒன்று

## இயேசு- தேவன் தந்தருளின மாபெரும் பரிசு

பரிசு என்றால் யாவருக்கும் விருப்பமே. நீங்கள் விரும்புகின்றதை யெல்லாம் கொடுக்கமுடியும் என்று ஒருவர் சொன்னால் நீங்கள் எந்தப் பரிசைக் கேட்பீர்கள்? உடனே நீண்ட பட்டியல் ஒன்று தயாரித்து விரும்புவதையெல்லாம் எழுத ஆரம்பிப்பீர்கள். பின்பு அதிகமாக விரும் பும் சிலவற்றை மட்டும்விட்டுவிட்டு மற்றவைகளை அடிக்க ஆரம்பிப்பீர் கள்விரைவிலேயே உங்கள் பட்டியல் நீங்கள் அதிகமாக விரும்பக்கூடிய சிலவற்றைக் கொண்ட சிறு பட்டியலாக மாறும். அநேகர் வாழ்க்கையை சுலபமாக அனுபவிக்க செல்வத்தைக் கேட்பார்கள். மற்றும் சிலர் பணம் கொடுத்து பெற்றுக்கொள்ள முடியாத சந்தோஷம், ஞானம், புகழ் ஆரோக்கியம் இவைகளைக் கேட்கக் கூடும். முடிவில் மற்றெல்லாவற்றை யும் விட சந்தோஷமாக இருக்க வேண்டுமென்று கேட்கக்கூடும் இந்த சந்தோஷமானது ஏதோ ஒருவர் விரும்பினால் கிடைக்கும் ஒரு பொரு ளல்ல அதுக்கடவுள் உங்களுக்கு அருளும் ஈவாக இருக்கின்றது. இயற்கை யாவே ''நித்திய சந்தோஷத்தையும் நித்திய ஜீவனையும் பெற்றுக்கொள்ள நான் என்ன செய்ய வேண்டும்? என்று நீங்கள் கேட்பீர்கள். இக்கேள்வியா னது இன்று உலகமெங்குமுள்ளவர்களால் கேட்கப்படுவதாக இரு கின்றது. இதற்கு பதில், நாம் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவில் கண் டடையலாம். இக் குறுகிய பயிற்சியில் கிறிஸ்துவின் வாழ்க்கை வரலாற் றில் காணப்படும் உன்னத சம்பவங்கள் சிலவற்றையும், தேவன் உங்களி டமிருந்து விரும்புவது என்னவென்றும் படிப்பீர்கள்.

ஏறக்குறைய இரண்டாயிர வருடங்களுக்கு முன்பு லூக்கா என்னும் வைத்தியர் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் வாழ்க்கை வரலாற்றை எழுதினார். அவருடைய பிறப்பைக் குறித்து லூக்கா இவ்வாறு எழுதுகிறார் :-

''அக்காலத்தில் உலகமெங்கும் ஜனத்தொகை பதிவு செய்யப்பட வேண்டுமென்று ரோமப் பேரரசன் அகுஸ்துவின் கட்டளை ஒன்று பிறந் தது. இந்த முதலாம் கணக்கு, சிரியா நாட்டிலே சிரேனியு என்கிறவன் நாட்டின் அதிபதியாய் இருந்தபோது பதிவு செய்யப்பட்டது. எல்லாரும் பதிவு செய்து கொள்ளத் தங்கள் தங்கள் ஊர்களுக்குப் போனார்கள் யோசேப்பும் கலிலேயா நாட்டிலுள்ள நாசரேத்து என்னும் ஊரி லிருந்து யூதேயா நாட்டிலுள்ள பெத்லகேம் என்னும் தாவீதின் ஊரில் தன்னை பதிவுசெய்து கொள்வதற்காகப் போனான். ஏனென்றால் அவன்

தாவீதின் வம்சத்தாலும் குடும்பத்தாலுமாயிருந்தான். அவனுக்கென்று நிச்சயம் செய்யப்பட்டிருந்த மரியாள் அவனோடு சென்றாள்''

''அவள் கர்ப்பவதியாயிருந்தாள். அவர்கள் அவ்விடத்தில் இருக்கையில், அவளுக்கு பிரசவ வேளை வந்தது. அவள் தன் முதற்பேறான குமாரனைப் பெற்றெடுத்தாள்: பிள்ளையைத் துணிகளில் சுற்றி, தொழுவத்தின் முன்னணையில் படுக்க வைத்திருந்தாள். ஏனெனில் சத்திரத்தில் அவர்களுக்கு இடமில்லை. அப்பொழுது அப்பக்கங்களிலே மேய்ப்பர்கள் வயல் வெளியில் தங்கி, இரவில் தங்கள் மந்தையைக் காத்துக் கொண்டிருந்தார்கள். கர்த்தருடைய தூதன் அவர்களிடம் வந்து நின்றான். கர்த்தருடைய மகிமை அவர்களைச் சுற்றிலும் ஒளி வீசிற்று. அவர்கள் மிகவும் பயந்தார்கள். தேவதூதன் அவர்களிடம் ''பயப்படாதீர்கள்; இதோ எல்லா மக்களுக்கும் பெருமகிழ்ச்சி தருகிற நற்செய்தியை உங்களுக்கு அறிவிக்கிறேன், இன்று தாவீதின் ஊரிலே உங்களுக்கு ஆண்டவராகிய கிறிஸ்து என்னும் மீட்பர் பிறந்திருக்கிறார், குழந்தையைத் துணிகளில் சுற்றி முன்னணையில் கிடத்தியிருப்பதைக் காண்பீர்கள். இதுவே உங்களுக்கு அடையாளம்'' என்றான் அந்தக் கணமே விண்ணுலகச் சேனையின் திரள் அந்தத் தூதனுடனே சேர்ந்து, "உன்னதத்தில் தேவனுக்கு மகிமை, பூமியில் மனிதரிடையே சமாதானம், மனிதர் மேல் அவருக்கு பிரியம் என்று சொல்லித் தேவனைத் துதித்தார்கள் ''

''தேவ தூதர்கள் அவர்களைவிட்டு விண்ணுலகத்திற்கு சென்ற பிறகு, மேய்ப்பர்கள் ஒருவரையொருவர் நோக்கி, ''வாருங்கள், கர்த்தர் தனக்கு அறிவித்திருக்கின்ற இந்த நிகழ்ச்சியை நாம் பெத்லகேமுக்குப் போய்ப்பார்ப்போம்," என்று சொல்லிக்கொண்டு விரைந்து சென்று மரியாளையும் யோசேப்பையும் முன்னணையில் படுத்திருந்த குழந்தையைக்குறித்துத் தங்களுக்குச் சொல்லப்பட்ட செய்தியை அறிவித்தார்கள் அதைக் கேட்ட யாவரும் மேய்ப்பர் தங்களுக்குச் சொன்னவற்றைக் குறித்து வியப்படைந்தனர்.' மரியாளோ அந்தச் செய்திகள் எல்லாவற்றையும் தன் நினைவில் வைத்துக்கொண்டு சிந்தனை செய்துவந்தாள். மேய்ப்பர்கள் தங்களுக்குச் சொல்லப்பட்டதின் படியே கேட்டதும் கண்டதுமான எல்லாவற்றிற்காகவும் தேவனை மகிமைப்படுத்தி, துதித்துக் கொண்டே திரும்பிப்போனார்கள்."

வைத்தியனாகிய லூக்கா இயேசுவின் பிறப்பைக் குறித்து அதிக கவனம் செலுத்துகிறார். அவர் எழுதும்பொழுது மரியாளுக்குச் சம்ப

வித்ததைக் குறிப்பிடுகிருர். வரிவசூல் செய்துக்கொண்டிருந்தவனும் பின்பு இயேசுவுக்கு நெருங்கிய நண்பனுகவும் மாறிய மத்தேயு இயேசுவின் பிறப்பைக் குறித்து எழுதும்போது யோசேப்புக்கு என்ன சம்பவித்தது என்று கூறுகிருர்,

''இயேசு கிறிஸ்துவினுடைய பிறப்பின் விவரம்: அவருடைய தாயாராகிய மரியாள் யோசேப்பு என்பவனுக்கு நிச்சயம் செய்யப்பட்டிருந்தாள்; அவர்கள் கூடி வாழுமுன் அவள் கர்ப்பவதியாயிருந்ததாக தெரிய வந்தது. அவள் கர்ப்பவதியானது பரிசுத்த ஆவியின் செயல், அவளுடைய கணவன் யோசேப்பு நேர்மை தவருதவன்; அவளை அவமானத்துக்குள்ளாக்க மனமில்லாமல் அவளை அவன் இரகசியமாக விலக்கிவிடவேண்டுமென்றிருந்தான். அவன் இவ்வாறு முடிவு செய்திருக்க கர்த்தரின் தூதன் அவனுக்குக் கனவில் தோன்றி, ''யோசேப்பே. தாவீதின் குமாரனே, மரியாளை உன் மனைவியாக ஏற்றுக்கொள்ள பயப்பட வேண்டாம். ஏனெனில், அவளிடம் உருவாயிருப்பது பரிசுத்த ஆவியினுல் உண்டானது. அவள் ஒரு மகனைப் பெற்றெடுப்பாள், அவருக்கு இயேசு என்று பெயரிடுவாய்; ஏனெனில், அவரே தம்முடைய ஜனத்தை அவர்களுடைய பாவங்களினின்று மீட்பவர்'' என்ருன்.

''இதோ, கன்னிகையானவள் கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப் பெற்றெடுப்பாள்,"

''அவருக்கு இம்மானுவேல் என்று பேரிடுவார்கள்'' என்று கர்த்தர் தீர்க்கதரிசி மூலமாக உரைத்தது நிறைவேற இவையனைத்தும் நடந்தன. இம்மானுவேல் என்பதற்கு கடவுள் தம்மோடிருக்கிருர் என்பது பொருள்.

யோசேப்பு விழித்தெழுந்து கர்த்தரின் தூதன் தனக்கு கட்டளையிட்டபடியே செய்தான்; அவன் அவளைத் தன் மனைவியாக ஏற்றுக் கொண்டு; அவள் அக்குமாரனைப் பெற்றெடுக்கும் வரை அவளை அறியாதிருந்தான்; அந்தக் குமாரனுக்கு இயேசு என்று பெயரிட்டான்,''

அப்போஸ்தலனுகிய யோவானுடைய வார்த்தைகளில், தேவன் தம்முடைய ஒரே பேரான குமாரனில் விசுவாசமாயிருக்கிறவன் எவனும் கெட்டுப் போகாமல் நித்திய ஜீவனைப் பெறும்படி அவரைத் தந்தருளி (தேவன் தந்தருளின மாபெரும் பரிசு) இவ்வளவாய் உலகத்தில் அன்பு கூர்த்தார்.

இரு எழுத்தார்களும் வித்தியாசமான வகசகர்களை மனதில் வைத்துக்கொண்டு இயேசுவின் பிறப்பைப் பற்றி கூறுகிருர்கள். மத்தேயு

யூதர்களுக்காக எழுதுகிறார் அவர்கள் மனதைக்கவர இயேசுவானவ
தேவனுடைய வாக்குத் தத்தத்தின்படியே தாவீது இராஜாவின் சந்த
யிலும் கன்னிகையிடத்திலும் தோன்றினார் என்று நிரூபிக்க விரும்
கிறார். லூக்கா யூதர்கள் அல்லாதவர்களுக்கும் யூத பழக்கவழக்கங்களையு
தீர்க்கதரிசனங்களையும் விளங்கிக் கொள்ள முடியாதவர்களுக்காகவு
எழுதுகிறார். இரு எழுத்தாளர்களும் கீழ்க் காணுபவற்றை நமக்கு
கூறுகின்றனர்.

ஏரோதின் ஆட்சியின் இறுதி காலத்தில் இயேசு பிறந்தார். அவ
பிறப்பை தேவதூதர்கள் அறிவித்தார்கள். பரிசுத்த ஆவியானவரி
கிரியையினால் அவர் உற்பத்தியானார். அவரது தாயார் ஒரு கன்னிகை
மரியாள் தாவீதின் வம்சத்தானை யோசேப்பிற்கு நியமிக்கப்பட்டிரு
தாள். இயேசு பெத்லகேமில் பிறந்தார். தேவதூதன் அவரை மீட்ப
என்று அழைத்தான். அவருக்கு இயேசு என்று பேரிட வேண்டும்.

லூக்கா இன்னும் அதிகமாக என்ன நடந்தது என்று நமக்குச் சொ
லுகிறார் அகுஸ்துராயன் உலகமெங்கும் குடிமதிப்பெழுதும்படி கட்ட
யிட்டான்' சிரியா நாட்டினிலே சிரேனியு என்பவன் தேசாதிபதியாயிரு
தபோது இந்த குடிமதிப்பு எழுதப்பட்டது. யோசேப்பு தான் தாவீதின்
வம்சத்தவனாய் இருந்தபடியால் மரியாளும் யோசேப்பு பெத்லகேமுக்கு
போனார்கள். அவர்களுக்குச் சத்திரத்தில் இடமில்லாதிருந்தது. இயேசு
துணிகளில் சுற்றி முன்னணையில் கிடத்தப்பட்டிருந்தார் தேவதூதர்கள்
மேய்ப்பர்களுக்கு நற்செய்தியை அறிவித்தார்கள் தேவதூதர்கள்
இயேசுவை இரவில் வந்து பார்த்தார்கள்.

அடுத்த பாடங்களில் கிறிஸ்துவின் ஜீவிய வரலாற்று நாடகத்தில்
உன்னத சம்பவங்கள் போன்று காட்சியளிக்கும் சிலவற்றைப் படி
போம். அடுத்த பாடத்தில் இயேசு கிறிஸ்துவின் வாழ்க்கையில் நடக்
விருக்கும் காரியங்களை நூற்றுக்கணக்கான வருடங்களுக்கு முன்னமே
யுரைத்த வேதாகம தீர்க்க தரிசனங்களைப் படிப்பீர்கள். மூன்றாவது
பாடத்தில் நமக்கு கர்த்தராகிய இயேசுவை அருள, தேவனால் தெரிந்து
கொள்ளப்பட்ட கன்னிகை மரியாளைக் குறித்துப் படிப்பீர்கள் மற்ற
பாடங்களில் இத்தீர்க்கதரிசனங்கள் எவ்வாறு நிறைவேறின என்று
படிப்பீர்கள்.

இத்துடன் அனுப்பப்படும் கேள்விக்கார்டு ஒன்றில் உள்ள கேள்வி
களுக்கு பதில் எழுதி அக்கார்டை I. C. I. P. O. BOX 5036
BANGALORE-560 001 க்கு அனுப்புவதின்மூலம் நீங்களும் உங்களை இப்
பயிற்சிக்கு மாணவராக பதிவு செய்து கொள்ளலாம், கேள்விக் கார்டு

மக்குக் கிடைக்காவில்லையென்றால் எங்களுக்கு எழுதிக்கேட்டுப் பெற்றுக் கொள்ளவும். அந்தக்கார்டு எங்களுக்கு கிடைத்தவுடன் அடுத்த பாடங்கள் அனுப்பிவைக்கப்படும்.

இப்பாடங்களை சரிவர பூர்த்தி செய்து அனுப்புகிறவர்களுக்கு ஒரு நன்றிதழ் கொடுப்படும்.

ஃ

பாடம் இரண்டு

## இயேசு கிறிஸ்துவைப் பற்றி தீர்க்கதரிசிகள் உரைத்தது என்ன?

"தீர்க்கதரிசிகள் மூலம் தேவனால் உரைக்கப்பட்டது நிறைவேறும்படி" என்று வரி வசூலிப்பவனான மத்தேயு கூறினதைக் குறித்து ஒரு சிலவளை" உங்கள் மனதில் கேள்விகள் தோன்றியிருக்கக் கூடும்.

தீர்க்கதரிசிகள் தேவனிடத்திலிருந்து செய்திகளைப் பெற்று அவைகளை ஜனங்களுக்குக் கொடுத்தனர். சில சமயங்களில் அவைகள் இஸ்ரவேல் இராஜ்யத்திக்குரியதாயும் அல்லது ஒரு கூட்டம் ஜனங்களுக்குரியதாயும் இருந்தது.

1. தீர்க்கதரிசிகள் யார்?

எதிர்காலத்தில் என்னசம்பவிக்க இருந்ததோ அவைகளை முன் கூட்டியே அறிவிப்பதைக் காட்டிலும் அதிகமாக தீர்க்கதரிசிகள் கூறினார்கள். சில தீர்க்கத்ரிசிகள் ஜனங்கள் நீதியான ஜீவியம் செய்வது எப்படி என்று சொன்னார்கள். சிலர் அவர்ளுடைய பாவங்களை கண்டித்தனர். சிலர் கஷ்டங்ககாலங்ளில் அவர்களைத் தேற்றினார்கள். மேலும் தேவனுடைய கட்டளைகளை அனுசரித்து நடப்பவர்களுக்கு தேவன் அருளும் ஆசீர்வாதங்களையும் எடுத்துக் கூறினார்கள்,

### தீர்க்கதரிசிகளால் எழுதபட்டவைகள்

வேதாகமத்தில் பழைய ஏற்பாடு என்று அழைக்கப் படும் முதற் பிரிவில் தீாக்கதரிசிகள் எழுதியவைகள் அடங்கியிருக்கின்றன. வேதாகமமானது சுமார் 1600 வருடகால அளவில் எழுதபட்டது. 66 புத்தகங்கள் அடங்கிய இதை பரிசுத்த ஆவியால் ஏவப்பட்ட மனிதர்கள் எழுதினார்கள். பழைய ஏற்பாட்டில் தேவனுடைய கட்டளைகள், இஸ்ர

வேல் இனங்களோடு தேவன் ஈடுபட்ட சரித்திரம், நீதிமொழிகள், ஆ க்களுக்குரிய சங்கீதங்கள் மற்றும் அநேக தீர்க்கதரிசனங்களும் அ ங்கியிருக்கின்றன.

2. வேதாகமத்தின் எந்தப் பிரிவில் தீர்க்கதரிசிகள் எழுதியவைக அடங்கியிருக்கின்றன?

குறிப்பிட்ட சில பாகங்களை சுலபமாக கண்டுபிடிக்கத்தக்க வண்ண வேதாகமத்திலுள்ள புத்தகங்களை அதிகாரங்கள், வசனங்கள் என் பிரிக்கப்பட்டுள்ளன. மூலப் பிரதியில் அதிகாரங்கள், வசனங்கள் என் பிரிக்கப்படாமல் இருந்தது. ஆனால் அநேக வருடங்களுக்குப் பிற்பாடு அறிஞர்களால் அவைகள் சேர்க்கப்பட்டன அதிகாரங்களும் வசனங்களு எவ்வாறு குறிக்கப்பட்டுள்ளன என்பதைக் காட்ட கீழே ஒரு உதாரண மீகா என்பவர் எழுதிய புத்தகத்திலே 6-வது அதிகாரம் 8-வது வசன தில், "நியாயஞ்செய்து! இரக்கத்தைச் சிநேகித்து உன் தேவனுக்கு மு பாக மனத்தாழ்மையாய் நடப்பதை அல்லாமல் வேறே எண்ணத்தை கர்த்தர் உன்னிடத்திலே கேட்கிறார்'' என்று மட்டும் எழுதப்பட்டிருக் கின்றது. இதை மீகா 6:8 என்று இலேசாக குறிக்கப்பட்டிருக்கிற அடுத்த பாடங்களில் தெரிந்தெடுத்த வேதக் குறிப்புகளை இந்த முறையி எழுதி நாங்கள் குறிப்பிடுவோம்.

பழைய ஏற்பாடு எபிரேய மற்றும் அராமியக் என்னும் மொழிக ளும் புதிய ஏற்பாடு கிரேக்க மொழியிலும் எழுதப்பட்டன. கடந்த நூ றாண்டுகளில் அவைகளில் பல மொழிப் பெயர்ப்பு செய்யப்பெற்று இ பொழுது பரிசுத்த வேதாகமமானது 1000 மொழிகளுக்கு அதிகமா மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. ஆங்கில மொழியில் மட்டு குறைந்தது 100 விதமான மொழிப்பெயர்ப்புகள் உள்ளன. இப்பாடத்தி காணப்படும் வேத வசனங்கள் பல மொழிப்பெயர்ப்பிலிருந்து எடுக்கப்ப டுள்ளன. பழைய ஏற்பாட்டில் காணப்படும் கடைசி செய்தியானது இயேசு பிறப்பதற்கு 400 வருடங்களுக்கு முன்பே எழுதப்பட்டவைகளாம.

3. பழைய ஏற்பாடு எந்த மொழியில் எழுதப்பட்டது?

தீர்க்கதரிசிகளுக்கு தேவன் அருளிய செய்திகளே தீர்க்கதரிசனங் கள் என்று அழைக்கப்படுகின்றன. வேதாகம தீர்க்கதரிசனங்கள் கால நிலையை முன்னறிவிப்பது, வியாபாரிக்கு முன்னறிவு அல்லது குறி சொல் லுதல் இவைகளைப்போன்றதல்ல. கால நிலையை அளக்கிறவன் விஞ்ஞா

னக்கருவிகளின் ஒத்தாசையால் நாளைய வானிலை எப்படியிருக்கும் என்று அறிவிக்கிறான், வியாபாரிகள் அவனது சரக்குகள் விலை என்ன என்பது. தெரியும். அதை ஒரு குறிப்பிட்ட விலைக்கு என்றால் நல்ல லாபம் கிடைக்கும் என்று கணக்குப்பார்க்கிறான். குறி சொல்லுகிறவன் பொதுவாகப் பணம் கிடைக்கும் என்று அல்லது நல்ல அதிர்ஷ்டம் காத்துக்கொண்டிருக்கிறது என்று சொல்லுவான். இது எல்லோருக்கும் சகஜமாக ஒரு சமயத்தில் இல்லாவிட்டால் இன்னொரு சமயத்தில் வருவதுதான்.

4, தீர்க்கதரிசனம் என்றால் என்ன?

வேதாகம தீர்க்கதரிசனங்களோ நேரடியாக தீர்க்கதரிசிகள் தேவனிடமிருந்து பெற்றுக்கொண்டவைகளாம். அவைகள் ஒரு வேளை எதிர்காலத்தைப் பற்றியதாகவும் அல்லது நிகழ்காலத்திற்குறியதாகவும் இருக்கக் கூடும் அவைகள் மனிதனுடைய ஆவிக்குரிய நலனுக்காக கொடுக்கப்பட்டவைகளாம்.

5. தீர்க்கதரிசனம் கொடுக்கப்பட்டதன் நோக்கம் என்ன?

எதிர்காலத்தைப் பற்றி உரைக்கப்பட்ட சில தீர்க்கதரிசனங்கள் உடனே நிறைவேறின். சிலசில வருடங்களுக்குப் பின்பு நிறைவேறின. இன்னும் சில உரைக்கப்பட்ட அநேக வருடங்களுக்குப் பின்பு நிறைவேறின. ஒரு தீர்கதரிசி உரைத்த தீர்க்கதரிசனத்தின் ஒரு பகுதி ஒரு வேளை அவன் உயிரோடிருக்கும் நாட்களிலேயே நிறைவேறக் கூடும். மற்றொரு பகுதி அவன் மரணத்திற்குப்பின்பு நிறைவேறக்கூடும் சில தீர்க்கதரிசனங்கள் ஒரே தடவையில் பூரணப்படாமல் அநேக வருடங்களில் அவ்வப்பொழுது கொஞ்சம்கொஞ்சமாக நிறைவேறின எல்லா தீர்க்கதரிசனங்களும் இன்னும் ரிறைறேறுதலைப் பெறவில்லை. இப்பாடத்தில் இயேசு கிறிஸ்துவைக் குறித்து மோசே. தாவிது, ஏசேயா, மீகா மற்றும் சகரியா ஆகியவர்களால் எழுதப்பட்டவைகளிலிருந்து எடுக்கப்பட்ட சில தீர்க்கதரிசனங்களைப் படிப்போம்

6. எல்லா தீர்க்சதரிசனங்களும் நிறைவேறிவிட்டனவா?

7. கிறிஸ்துவைப் பற்றி ஒரு தீர்க்கதரிசி மட்டுமா தீர்க்கதரிசனம் உரைத்திருந்தார்?

## இயேசுவைப் பற்றிய தீர்க்கதரிசனங்கள் :

இயேசுவின் பிறப்புக்கு சுமார் 1400 வருடங்களுக்கு முன்பு ஜீவித்தார். மோசே மற்ற வேதாகம எழுத்தாளர்களை காட்டிலும் அதிகமாக

வேதாகமத்தில் அவர் எழுதியிருக்கிறார். அவர் ஒரு பெரிய தீர்க்கதரிசியாகவும், சட்டம் இயக்குபவராகவும், போதகராகவும் இருந்தார், அவர் தம்முடைய ஜனங்களை அடிமைத்தனத்திலிருந்து விடுவித்து அவர்களுக்கு அவர் தேவனுடைய கட்டளைகளை கொடுத்தது வருங்காலத்தில் யார் மேசியாவாக வருவார் என்றும் அறிவித்தார். அவருக்கு தேவன் உரைத்ததை உபாகமம் என்னும் புத்தகத்தில் இவ்வாறு எழுதியிருக்கிறார்.

''உன்னைப்போல ஒரு தீர்க்கதரிசியை நான் அவர்களுக்காக, அவர்கள் சகோதரரிலிருந்து எழும்பப்பண்ணி என் வார்த்தைகளை அவர் வாயில் அருளுவேன்; நான் அவருக்குக் கற்பிப்பதை எல்லாம் அவர்களுக்குச் சொல்லுவார் என் நாமத்தினாலே அவர் சொல்லும் என் வார்த்தைகளுக்குச் செவி கொடுக்காதவன் எவனோ, அவனை நான் விசாரிப்பேன்." உபாகமம் 18:18,19.

தேவனால் மோசே மூலமாக கொடுக்கப்பட்ட நியாயப்பிரமாணங்களே பல நூருவஷங்களுக்கு ஜனங்களை ஆளும் சட்டமாக இருந்து நியாயம் வழங்கி வந்தது மேசியா தோன்றும்போது இது மாற்றப்படும் என்று எழுதினார்:

4-ம் பாடத்திலிருந்து 8-ம் பாடம் வரை நீங்கள் இயேசுவின் போதனைகளில் சிலவற்றைப்படிப்பீர்கள்,

தாவீது சுமார் கி.மு. 1000 வருடங்களுக்கு முன்பு ஜீவித்தவர். (கி, மு, என்றால் கிறிஸ்து பிறப்பதற்கு முன்பு என்று அர்த்தம்,) அவர் ஒரு பெரிய இராஜாவாகவும், பாடகராகவும், மேய்ப்பராகவும், போர் வீரராகவும் பக்தி பாடல்களை இயற்றுகிறவராகவும் இருந்தார், சங்கீதப் புஸ்த்தகம் என்று அழைக்கப்படுவதில் காணும் அவருடைய அனேக எழுப்புதல் பாடல்கள் இயேசுவின் வாழ்க்கைச் சம்பவங்களை விவரிக்க கூடியதாக இருக்கின்றன. அவர் கீழ்க்கண்ட வாறு எழுதுகிறார்;-

''என் பிராண சிநேகிதனும், நான் நம்பினவனும் என் அப்பம் புசித்தவனுமாகிய மனுஷனும் என்மேல் தன் குதிக்காலைத் தூக்கினான்" சங்கீதம் 4:9, ''என் ஆத்துமாவை பாதாளத்தில் விடீர்; உம்முடைய பரிசுத்தவானை அழிவைக் காண வொட்டீர்" சங்கீதம் 16:10"

இவைகள் 9 மற்றும் 10 வது பாடங்களில் இயேசுவைக் காட்டிக் கொடுத்தல் இயேசுவின் உயிர்த்தெழுதல் என்னும் தலைப்புகளின் கீழ்க் கூறப்பட்டிருப்பதைக் காண்பீர்கள்,

8. தேவன் தம்முடைய கட்டளைகளை யாரிடம் கொடுத்திருந்தார்?

ஏசாயா ஏறக்குறைய கி.மு. 700 வருடங்களுக்கு முன்பு ஜீவித்தவர் அவருடைய நாட்களில் அரசாட்சி செய்த நான்கு அரசர்களில் இருவர் அவரைக் கண்ணியமாக நடத்தினர். மற்ற தீர்க்கதரிசனங்களைக் காட்டிலும் இவருடைய தீர்க்க தரிசனங்களே புதிய ஏற்பாட்டில் அதிகமாக எடுத்துக் கூறப்பட்டுள்ளது அவர் எழுதியதாவது:-

"இதோ ஒரு கன்னிகை கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப் பெறுவாள். அவருக்கு இம்மானுவேல் என்று பேரிடுவாள். ஏசாயா 7:14"

9. எந்த தீர்க்கதரிசி ஒரு கன்னிகை இயேசுவைப் பெறுவாள் என்று கூறினர்?

ஏசாயாவின் நாட்களில் வாழ்ந்த மீகா என்னும் இன்னொரு தீர்க்கதரிசியும் அவர் எந்த இடத்தில் பிறப்பார் என்று குறிப்பிட்டு எழுதியிருக்கிறார்,

"எப்பிராத்தா எனப்பட்ட பெத்லகேமே, நீ யூதேயாவிலுள்ள ஆயிரங்களுக்குள்ளே சிறியதாயிருந்தாலும் இஸ்ரவேலை ஆளப்போகிறவர் உன்னிடத்திலிருந்து புறப்பட்டு என்னிடத்தில் வருவார். மீகா 5:2."

10. அவர் எந்த இடத்தில் பிறப்பார் என்று குறிப்பிட்டு தீர்க்கதரிசி யார்?

முதலாம் பாடத்தில் இத்தீர்க்கதரிசனங்கள் இரண்டும் எவ்வாறு நிறைவேறின என்று பார்க்கிறோம்,

இயேசு தன்னுடைய ஆரம்ப ஊழிய காலத்தில் ஏசாயாவிலிருந்து பின்வரும் தீர்க்கதரிசனத்தை எடுத்து வாசித்தார்.

கர்த்தராகிய தேவனுடைய ஆவியானவர் என்மேல் இருக்கிறார். சிறுமைப்பட்டவர்களுக்கு சுவிசேஷத்தை அறிவிக்க கர்த்தர் என்னை அபிஷேகம் பண்ணினர் இருதயம் நொறுங்குண்டவர்களுக்கு காயங் கட்டுதலையும், சிறைப்பட்டவர்களுக்கு விடுதலையும், கட்டுண்டவர்களுக்கு கட்டவிழ்த்தலையும் கூறவும், கர்த்தருடைய அனுக்கிரக வருஷத்தையும் நம்முடைய அனுக்கிரக வருஷத்தையும் நம்முடைய தேவன் நீதியைச் சரிகட்டும் நாளையும் கூறவும் துயரப்பட்ட அனைவருக்கும் ஆறுதல் செய்யவும். லூக்கா 4:18."

லூக்கா 4:18-19-ல் காணும் வசனங்கள் ஏசாயா 61:2-லிருந்து எடுத்துக் கூறப்பட்டவைகளாம்.

ஏசாயாவின் தீர்க்கதரிசனம் இயேசுவில் நிறைவேறின அவர் நற்செய்தியை அறிவிக்கிறவராய் சுற்றித்திரிந்தார், வியாதியஸ்தர்களைத்தொட்டு அவர் சுகமாக்கினார், குருடர்கள் திரும்ப கண்பார்வையை அடைந்தார்கள். பாவத்தினால் கட்டப்பட்டிருந்தவர்கள் விடுதலையைக் கண்டடைந்தார்கள். ஏசாயா தீர்க்கதரிசனத்தைக் குறித்து ''இந்த வேதவாக்கியம் இன்றையதினம் நிறைவேறிற்று, என்று இயேசு உரைத்தார்,

நான்கு முதல் எட்டுவரையுள்ள பாடங்களில் இத் தீர்க்கதரிசனங்கள் எவ்வாறு நிறைவேறின என்று நீங்கள் படிப்பீர்கள்,

ஒன்பதாம் பாடத்தில் ஏசாயா எழுதியது இன்னொரு முக்கியமான தீர்க்கதரிசனத்தைப் பற்றிப் படிப்பீர்கள். அவர் எழுதியதாவது :

'' அவர் நொருக்கப்பட்டும் ஒடுக்கப்பட்டும் இருந்தார். ஆனாலும் தம்முடைய வாயை அவர் திறக்கவில்லை அடிக்கப்படும்படி கொண்டு போகிற ஒரு ஆட்டுக்குட்டியைப் போலவும், தன்னை மயிர்க் கத்தரிக்கிறவர்களுக்கு முன்பாகச் சத்தமிடாதிருக்கிற ஆட்டைப் போலவும் அவர் தம்முடைய வாயைத் திறவாதிருந்தார்''

ஏசாயா 53, 7

சகரியா எழுதின தீர்க்கதரிசனங்கள் 9, 10-வது பாடங்களில் குறிக்கப்படும்.

## இயேசுவைக் குறித்து எழுதப்பட்டவைகள்

இயேசுவானவர் எவ்வாறு தோன்றுவார் என்று தீர்க்கதரிசிகள் உரைத்த வண்ணமே அவர் தோன்றினார். அவர் அவைகளைச் செய்வார் என்று தீர்க்கதரிசிகள் கூறினார்களோ அவைகளையெல்லாம் அவ்வாறே செய்தார். இயேசுவைக் குறித்தும் அவருடைய போதனைகளைக் குறித்துக் ஆயிரக்கணக்கான புத்தகங்கள் எழுதப்பட்டுள்ளன.

ஆரம்பத்தில் அவரை ஏற்றுக் கொண்டவர்களும், அவருடைய சீஷர்களுமே முதலாவதாக அவரைப் பற்றி எழுதினார்கள். அவைகளையே புதிய ஏற்பாட்டில் காண்கிறோம், புதிய ஏற்பாடானது இயேசுவைப் பற்றியும், திருச்சபையின் ஆரம்பத்தைப் பற்றியும், அப்போஸ்தலருடைய உபதேசத்தைப் பற்றியும், மேலும் நிறைவேறவிருக்கின்ற தீக்கதரிசனங்களையும் தொகுத்து எழுதப்பட்டவைகளாம். புதிய ஏற்பாடே இப் பாடத்திற்கு அஸ்திபாரமாக இருக்கிறது.

இயேசு கிறிஸ்துவை விசுவாசிப்பதின் மூலம் பாவத்திலிருந்து இரட்சிப்பு வியாதியிலிருந்து விடுதலையும் நித்திய சந்தோஷமும் சமா

தானமும் கிடைக்கும் என்னும் நற்செய்தியை அறிவிப்பதே புதிய எற்பாட்டை எழுதியவர்களின் நோக்கமாக இருக்கிறது.

11. புதிய ஏற்பாட்டை எழுதியவர்களின் நோக்கம் என்ன ?

பாடம் மூன்று

## கன்னித் தாயாகிய மரியாள்

### காபிரியேல் மரியாளைக் காணச் செல்லுதல்

தேவன் தம்முடைய தூதனாகிய காபிரியேலை பரிசுத்த நகரமாகிய எருசலேமுக்கோ அல்லது அதில் வசித்து வந்த பிரதான ஆசாரியனிடத்திற்கோ அனுப்பாமல் எல்லோராலும் வெறுக்கப்பட்டு வந்த ஊராகிய நாசரேத்து என்னும் பட்டணத்திற்கு அனுப்பி அங்கு வாழ்ந்துவந்த ஒரு பெண்ணாகிய மரியாளை சந்திக்கும்படி செய்தார்.

1. மரியாள் எங்கே வசித்து வந்தாள் ?

ஏறக்குறைய ஆயிரம் வருடங்களுக்கு பழைய இஸ்ரவேல் தேசத்துக்கு எருசலேம் நகரம் தலைநகரமாக விளங்கியது; அது இஸ்ரவேலின் இரண்டாவது ராஜாவாகிய தாவீது இராஜாவால் கட்டப்பட்டது. அங்கு மக்களுக்காக பாவநிவாரண பலியும் சர்வாங்க தகன பலிகளும் செலுத்தி தொழுகை நடத்திவந்த தேவாலயமும் இருந்தது. பக்தியுள்ள யூதர்கள் எங்கே இருந்தாலும் தேவாலயம் இருந்த திசை நோக்கியே தேவனை வணங்கி வந்தனர். அது பரிசுத்த நகரம் என்று அழைக்கப்பட்ட போதிலும் மற்ற நகரங்களைவிட இது எவ்விதத்திலும் நீதியில் உயர்ந்ததாகக் காணப்படவில்லை.

நாசரேத்து 15,000 பேரைக் கொண்ட ஒரு சிறிய பட்டணமாக இருந்தது இது எருசலேமிலிருந்து ஒரு சீதோன் பட்டணத்திற்குச் சென்ற பெருவழியின் மத்தியிலே மலை அடிவாரத்திலே இருந்தது. ஒட்டகக்காரர்கள், வியாபாரிகள், போர் வீரர்கள், கிரேக்கர், ரோமர் மற்றும் யூதர் எல்லாரும் இரவில் தங்கிப் போவதற்கு இது ஒரு வசதியான இடமாக இருந்தது. அக்கிரமும் பாவமும் சர்வ சாதாரணமாக நிலவியதால் "நாசரேத்திலிருந்து நன்மை பிறக்கக் கூடுமோ!" என்ற பழமொழி இருந்து வந்தது.

2. நாசேரத்து எங்கே இருந்தது? அங்கே சர்வ சாதாரணமாகக் காணப்பட்டது என்ன?

மரியாளுக்கு நியமிக்கப்பட்டிருந்த யோசேப்பும் அங்கேதான் இரு தான். தச்சனுகிய யோசேப்பு தேவபக்தியுள்ளவனுக இருந்தான். இவ தாவீது இராஜாவின் சந்ததியைச் சேர்ந்தவன். மரியாளும் அப்படி தேவ சக்தியுள்ளவளும் வேதவசனங்களை நன்ருக அறிவித்தவ மாய் இருந்தாள். அவள் மிகவும் கெட்டிக்காரியாகவும், உண்மை தாழ்மை, கீழ்ப்படிதல் என்னும் நற்குணம் நிறைந்த பெண்ணுகவு விளங்கினுள். ஆகவே உலகத்திலிருந்த மற்றெல்லாப் பெண்களையு விட இவளையே தேவன் இரட்சகரைப்பெற்றெடுக்கும் தாயாக தெரிந் கொண்டார்.

3. யோசேப்பு எங்கே வசித்து வந்தான்?

## காபிரியேல் கொண்டுவந்த செய்தி

லூக்கா மரியாளைபற்றியும் அவள் எவ்வாறு காபிரியேலின் செ திக்கு மறுமொழி கூறினுள் என்றும் எழுதுகிருர்.

"அவளிடம் தேவதூதன் சென்று," கிருபை பெற்றவளே வாழ் கர்த்தர் உன்னேடிருக்கிருர்" என்று சொன்னுன். அவளோ அவனுடை வார்த்தையினுல் கலக்கமடைந்து, இந்த வாழ்த்துதலின் பொருள் என் மோ என்று சிந்திக்கத் தொடங்கினுள், தூதன் அவளை நோக்கி, மரிய ளே, பயம் வேண்டாம், நீ கடவுளிடம் கிருபைபெற்றிருக்கிருய், இதோ நீ கர்ப்பந்தரித்து ஒரு குமாரனைப் பெற்றெடுப்பாய். அவருக்கு இயே என்று பெயரிடுவாய். அவர் பெருமை வாய்ந்தவருயிருந்து உன்னதமா வருடைய குமாரன் எனப்படுவார். தேவனுகிய கர்த்தர் அவருடை தந்தையாகிய தாவீதின் சிங்காசனத்தை அவருக்குக்கொடுப்பார். அவ யாக்கோபின் வமிசத்தை என்றென்றைக்கும் அரசாளுவார்; அவருடை ஆட்சிக்கு முடிவிராது" என்ருன் லூக்கா 1:28-33.

4. மரியாள் இயேசுவின் தாயாக தெரிந்துகொள்ளப்பட்டாள் என் அறிவித்தது யார்?

5. இயேசு யாருடைய குமாரன் எனப்படுவார் என்று தேவதூத அறிவித்தான்?

## மரியாளின் பதில்

"மரியாள் தூதனிடம், 'இது எப்படி நடக்கும்? நான் கணவ அறிந்ததில்லையே' என்ருள் அதற்கு தூதன், "பரிசுத்தாவி என்மே வரும்; உன்னதமானவருடைய வல்லமை உன்மேல் நிழலிடும்; ஆகையா

உன்னிடம் பிறக்கும் குழந்தை தேவகுமாரன் எனப்படும். உன் உறவினளாகிய எலிசபெத்தும் தன் முதிர்வயதில் ஒரு மகனைக் கர்ப்பந்தரித்திருக்கிறாள்; மலடி என்று சொல்லப்பட்ட அவளுக்கு இது ஆறும் மாதம் கடவுளால் செய்ய இயலாத காரியம் ஒன்றுமில்லை" என்றான். அதற்கு மரியாள், "இதோ, நான் கர்த்தரின் அடிமை உம்முடைய வார்த்தையின்படி எனக்கு ஆகக்கடவது" என்றாள், அப்பொழுது தேவதூதன் அவ்விடமிருந்து போய்விட்டான்," லூக்கா 1;34-38.

6. மரியாளின் விசுவாசத்தைப் பெலப் படுத்தும்படியாக அவளுடைய உறவினளாகிய வேறு யாரும் பிள்ளை பெறவிருப்பதாக தேவதூதன் அறிவித்தான்?

## மரியாள் எலிசபெத்தைச் சந்தித்தல்

தேவனுடைய செய்தியைக் கேட்டவுடனே அவளுடைய சரீரத்தில் ஒரு அற்புதமான மாறுதலை உணர்ந்தாள். உலகப் பிரகாரமான தகப்பன் இல்லாமலேயே அவள் ஒரு குழந்தையைப் பெற்றெடுக்கப் போகிறாள், தேவன் தம்முடைய இரட்சகரின் தாயாக இருக்க அவளைத் தெரிந்து கொண்டார். ஆனால் மரியாளோ இப்பொழுது ஒரு பெரிய பிரச்சினையைச் சந்திக்க வேண்டியிருந்தது; அவளுக்குச் சம்பவித்த இவைகளை யார் நம்புவார்கள்? அவளோ ஒரு நல்ல மனிதனுக்கு நிச்சயம் பண்ணப்பட்டிருக்கிறாள். அவள் கர்ப்பவதியாயிருக்கிறாள் என்று கண்டால் அவன் இவளைக் குறித்து என்ன நினைப்பான்? அவளை ஒழுக்கம் கெட்டவள் என்று குற்றம் சாட்டுவான் என்றால் அவளைக் கல்லெறிந்து கொல்ல வேண்டியிருக்குமே! அவள் என்ன செய்வாள்.

தேவதூதன், தன் இனத்தாளாகிய எலிசபெத்துக்கு கர்த்தர் செய்த அற்புதத்தின் மூலம் அவள் ஒருவள்தான் இதை விளங்கிக் கொள்ள முடியும் என்று எண்ணினாள்.

7. மரியாள் யாரைப் பார்க்கும்படி மலைநாட்டுக்குப்போனாள்?

"அதற்குப்பிறகு ஒரு நாள் மரியாள் எழுந்து மலைநாட்டுக்கு விரைந்துபோய் யூதேயாவிலுள்ள ஓர் ஊரில், சகரியாவின் வீட்டிற்குள் சென்று; எலிசபெத்தை வாழ்த்தினாள். எலிசபெத்து மரியாளுடைய வாழ்த்துதலைக் கேட்டபோது, அவள் வயிற்றிலிருந்த பிள்ளை துள்ளிற்று; எலிசபெத்து பரிசுத்த ஆவியினால் நிரப்பப்பட்டு, உரத்த குரலில், பெண்களிடையே நீ ஆசிர்வதிக்கப்பெற்றவள். உன் கர்ப்பத்தின் கனியும் ஆசிர்வதிக்கப்பெற்றது. என் ஆண்டவரின் தாயார், என்னிடம் எழுந்தருளின எனக்குக் கிடைத்த பாக்கியந்தான் என்னே! நீ வாழ்த்தின தொனி என் காதில் விழுந்தவுடனே என் வயிற்றிலுள்ள பிள்ளை களிப்

புடன் துள்ளிற்று. கர்த்தர் எனக்குச் சொன்னவை நிறைவேறித் தீரும் விசுவாசித்தவளே பாக்கியம் பெற்றவள்" என்றாள். லூக்கா 1:39-45.

## மரியாளின் ஸ்தோத்திரப் பாடல்

"அதைக் கேட்ட மரியாள், "என் ஆத்துமா கர்த்தரை மகிமைப் படுத்துகிறது. என் ஆவி என் மீட்பராகிய தேவனில் களிகூருகிறது; அவர் தம் அடிமையின் தாழ்நிலையை கண்ணோக்கினார். ஆம் இது முதல் எல்லாத் தலைமுறையினரும் என்னைப் பாக்கியம் பெற்றவள் என்பார்கள்.""

"வல்லமையுடையவர் செய்த செயல்களை எனக்குச் செய்தார்; அவருடைய நாமம் பரிசுத்தம்."

"அவருடைய இரக்கம் அவருக்குப் பயந்தவர்கள்மேல் தலைமுறை தலைமுறையாக இருக்கும்." லூக்கா 1 : 46 - 50.

மரியாள் ஏறக்குறைய மூன்று மாதம் எலிசபெத்துடனே தங்கிவிட்டு தன் வீட்டுக்குத் திரும்பிப் போனாள்.

மரியாளும் நம்மைப்போல ஒரு மனுஷிதான் என்பதை மூன்று காரியங்கள் நமக்குச் சுட்டிக் காட்டுகின்றன. தேவதூதனுடைய செய்தி அவளைக் கலங்கப் பண்ணினது; அவனுடைய தீர்க்கதரிசனத்தை விளங்கிக்கொள்ள முடியாமல் "இது எப்படியாகும்?" என்றாள் பின்பு அவள் தேவனைத் தன் இரட்சகர் என்று அழைத்தாள். மூன்றாவதாக காபிரியேல் அவளைத் தொழுதுகொள்ளவில்லை.

8. மரியாள் மனுஷிக ஸ்திரீதான் என்பதைக் காட்டும் மூன்று காரியங்கள் யாவை?

## மரியாளின் சுத்திகரிப்பு

இயேசு பிறந்து நாற்பது நாள் ஆனபின்பு மரியாளும் யோசேப்பும் சுத்திகரிப்பின் முறைமைகளை அநுசரிக்கும்படியாக எருசலேமுக்குச் சென்றார்கள். கர்த்தருடைய நியாயப்பிரமாணத்தில் எழுதியிருக்கிறபடி அவர்கள் இரண்டு புறாக் குஞ்சுகளை பலி செலுத்த வேண்டியிருக்கிறது. குழந்தையாயிருந்த இயேசுவை அவரது பெற்றோர்கள் தேவாலயத்திற்குள் கொண்டுவந்த பொழுது, தேவ பக்தியுள்ள சிமியோன் என்னும் பேர் கொண்ட ஒரு மனுஷன் அவர்களைச் சந்தித்தான். அவன் அவரைத் தன் கைகளில் ஏந்திக் கொண்டு, துதி செலுத்தி,

"ஆண்டவரே உமது வார்த்தையின்படி உம்முடைய அடியேனை இப்போது சமாதானத்தோடு அனுப்பிவிடுகிறீர்!

புறஜாதிகளைப் பிரகாசிப்பிக்கிற ஒளியாகவும், உம்முடைய ஜனமா
ய இஸ்ரவேலுக்கு மகிமையாகவும் இருக்கும்படி, எல்லா நாட்டினருக்
ும் முன்பாக நீர் ஆயத்தம் செய்த உமது மீட்பை என் கண்கள்
ண்டன " என்றான். [புறஜாதிகள் என்றால் யூதரல்லாதவர் என்று
ர்த்தம்.] லூக்கா 2 : 28-32.

யோசேப்பும் மரியாளும் இயேசுவை தேவாலயத்திற்கு
அழைத்துச் செல்லுதல்

இயேசுவின் தாயும் தந்தையும் ஆண்டுதோறும் பஸ்காப் பண்டி
கையின் பொருட்டு எருசலேமுக்குப் போவதுண்டு. அவருக்கு பன்னி
ண்டு வயதானபோது, அவர்கள் அந்தப் பண்டிகையை ஆசரிக்கும்
வழக்கப்படியே அங்கே போய் பண்டிகை நாட்கள் முடிந்தபின் திரும்பி
ர்கள். பிள்ளையாகிய இயேசு எருசலேமில் தங்கிவிட்டார் ஆனால் இது
அவருடைய தாய் தந்தையர்க்குத் தெரியாமற் போயிற்று. பயணம் செய்
வோரின் கூட்டத்தில் இருப்பார் என்று நினைத்துக்கொண்டு. ஒரு நாள்
பயணம் செய்தபின் உறவினரிடையேயும் அறிமுகமானவர்களிடையேயும்
அவரைத் தேடினார்கள். காணாததினாலே அவரைத் தேடிக்கொண்டே
எருசலேமுக்குத் திரும்பிப் போனார்கள். மூன்று நாட்களுக்குப் பின்,
அவரைத் தேவாலயத்தில் கண்டார்கள். அவர் போதகர்கள் மத்தியில்
உட்கார்ந்துகொண்டும் அவர்கள் பேசியதைக் கேட்டுக்கொண்டும் அவர்
களை வினவிக்கொண்டும் இருந்தார், அவர் பேசியதைக் கேட்ட யாவரும்
அவருடைய விவேகத்தையும் அவர் பகர்ந்த விடைகளையும் கண்டு திகைப்
புற்றனர். தாயும் தந்தையும் அவரைக் கண்டு வியப்படைந்தார்கள்.
அப்பொழுது அவருடைய தாய் அவரை நோக்கி, "மகனே, ஏன் எங்க
ளுக்கு இப்படிச் செய்தாய்! உன் தந்தையும் நானும் கவலையோடு உன்
னைத் தேட நேர்ந்ததே" என்றாள். அதற்கு அவர் "நீங்கள் ஏன் என்
னைத் தேடினீர்கள்? நான் என் பிதாவின் வீட்டிலே இருக்கவேண்டு
மென்பது உங்களுக்குத் தெரியாதா?" என்றார். அவர் சொன்ன வார்த்
தையை அவர்கள் புரிந்துகொள்ளவில்லை. அவர் அவர்களோடு போய்
நாசரேத்தூரை அடைந்து அவர்களுக்கு அடங்கி நடந்து வந்தார் அவர்
தாயோ இந்தக் காரியங்களையெல்லாம் தன் உள்ளத்தில் வைத்துக்
கொண்டாள்." லூக்கா 2 : 41.51.

9. இயேசுவினுடைய விவேகத்தையும் அவர் பகிர்ந்த பதில்களையும் கண்ட ஜனங்கள் என்ன நினைத்தனர்?

இயேசுவானவர் வளர்ந்து வந்த நாட்களில் அவர் மரியாளிடத்தில் இன்னும் அநேக காரியங்களைச் சொலலியிருக்கக் கூடும், இந்தச் சங்கதிகளையெல்லாம் தன் இருதயத்திலே வைத்துக் கொண்டாள்,

அவருடைய பாலியப் பிராயத்தைக் குறித்துக் கூறும்பொழுது பெற்றோர்களோடு தேவாலயத்திற்குச் சென்றதை மட்டும் குறிப்பி பட்டுள்ளது.

## மரியாளும் இயேசுவின் முதலாம் அற்புதமும்

இயேசுவானவர் தனது ஊழியத்தைத் தொடங்கி முதலாவ அற்புதத்தைச் செய்தபோது மரியாளும் அங்கே இருந்தாள்.

கலிலேயாவிலுள்ள கானாவூரில் நடந்த கலியாணத்திற்கு அழைக் பட்டிருந்தாள். இயேசுவும் அவருடைய சகோதரர்களும் மற்றும் சீ களும் அங்கிருந்தனர். திராட்சரசம் குறைபட்டபோது இயேசுவி தாயார் அவரைப் பார்த்து அவர்களுக்கு திராட்சரசம் இல்லை என் சொல்லி வேலைக்காரரை அழைத்து இவ்விதம் கூறினாள்.

அவர் உங்களுக்கு ஏதேது சொல்லுகிறாரோ அதைதயெல்லாம் செ யுங்கள் என்றாள், இயேசு தொட்டிகளில் தண்ணீர் நிரப்புங்கள் என் அவர்களுக்குச் சொன்னார். அவர்கள் அவைகளை வாய்மட்டும் நிரப் னார்கள். அவர் அவர்களிடம், இப்பொழுது மொண்டு பந்தி விசாரிப் காரனிடம் கொண்டு போங்கள் என்றார்; அவர்கள் கொண்டு போ கள். திராட்சரசமாய் மாறின தண்ணீர் பற்றி விசாரிப்புக்காரன் பார்த்தான். அது எங்கிருந்து வந்தது என்று அவனுக்குத் தெரியா தண்ணீரை மொண்டுவந்த வேலைக்காரனுக்குத்தான் தெரியும். ப விசாரிப்புக்காரன் மணவாளனை அழைத்து அவனிடம் எந்த மனுஷ முதலில் நல்ல திராட்சரசத்தைப் பரிமாறி, ஜனங்கள் "ன்றாய்க் குடி பின் கீழ்த்தரமானதைப் பரிமாறுவான்; நீரோ நல்ல ரசத்தை இது ரைக்கும் வைத்திருந்ீரே என்றான். கலிலேயாவிலுள்ள கானாவி இயேசு தமது அடையாளங்களுக்கு ஆரம்பமாக இதைச்செய்து, தம மகிமையை வெளிப்படுத்தினார். அவருடைய சீஷர் அவரில் விசுவாச வைத்தார்கள.

''அதன் பின்பு அவர் தம்முடைய தாயோடும் சகோதரரோடும் சீ ரோடும் கப்பூர் நகூமுக்குப் போனார். அவர்கள் அங்கே சிலநாள் தங் னார்கள்,''

10. இயேசு தமது முதலாவது அற்புதத்தை எங்கே செய்தார்?

11. அற்புதத்தைக் கண்ட சீஷர்கள் என்ன செய்தார்கள்?

## மரியாளின் குடும்பம்

மரியாளின் குடும்பத்தைப் பற்றி அதிகமாகக் கூறப்படவில்லை. யேசு பன்னிரண்டு வயதாயிருக்கையில் யோசேப்பின் பெயர் கடைசி வையாகக் கூறப்பட்டுள்ளது. அவளுக்கு யாக்கோபு, யோசேப்பு, யோன் மற்றும் யூதா என்னும் பெயருடைய வேறு குமாரர்களும் ருந்தனர். அவளுடைய மற்ற இரண்டுக்கும் மேற்பட்ட குமாரத்தி ின் பெயர்கள் கொடுக்கப்படவில்லை.

தண்ணீரை திராட்சரசமாக மாற்றிய அற்புதத்தை அப்போஸ்தல ிய யோவான் எழுதுவதோடு ' அவர் சகோதரரும் அவரில் விசுவாசம் வக்கவில்லை என்று குறிப்பிட்டுக் காண்பிக்கிறார். ஆனால் இயேசுவின் ணத்திற்குப் பின்பு அவர்கள் அவருடைய சீஷராக மாறினார்கள். அவர் ில் யாக்கோபு எருசலேம் திருச்சபையில் சிறந்த தலைவராக ளங்கினார்.

இயேசு சிலுவையில் அறையப்பட்டதை மரியாளும் பார்த்துக் ாண்டிருந்தாள். ஏழு வாரங்களுக்குப் பின்பு முதலாவது கிறிஸ்தவ பை தோன்றியபோது அங்கே ஜெபித்துக் கொண்டிருந்தவர்களில் மரி ளும் காணப்பட்டாள், இந்தச் சம்பவங்கள் 6 மற்றும் 10-வது பாடத் ன் தலைப்புகளாக இருக்கின்றது.

### பாடம் நான்கு

## ஒரு கிராமத்து பெண்ணுக்கு இயேசுவின் உபதேசம்

### சமாரியப் பிரயாணம்

இயேசு பன்னிரண்டு பேர்களைத் தமக்கு உதவியாயிருக்கும்படித் தரிந்து கொண்டார். அவர்களை நாம் சீஷர்கள் என்று அழைக்கிறோம், வர்களில் மத்தேயு யோவான் ஆகிய இரண்டு பேரும் இயேசுவின் ாழ்க்கை வரலாற்றை எழுதினார்கள். யோவான் அவருடைய சமாரியப் ரயாணத்தைப் பற்றிக் கூறுகிறார் :

கலிலேயாவிலிருந்து எருசலேமுக்குச் செல்லும் வழி சமாரிய ாகாணத்தின் வழியாகச் சென்றது, யூதர்கள் சமாரியர்களை வெறுத்த டியால் சுற்றி வளைத்துக் கொண்டு பிரயாணம் செய்தனர். சமாரியர்க

ளுடைய இனமும் பழக்கவழக்கங்களும் வித்தியாசமானதாக இருந் படியால் அவர்களைத் தாழ்வாக எண்ணினார்கள். ஆனால் இயேசுவே சமாரியர்களைக் குறித்து வித்தியாசமான மனப்பான்மையுடையராயில்ல மல் அவர் எல்லோரையும் நேசித்தார். தேவன். இரட்சிப்பின் ஒளி எல்லா ஜனங்களுக்கும் அனுப்புவதாக வாக்குத்தத்தம் பண்ணியிருந்தா ஆகவே அவர்களுக்கும் தேவனுடைய இரட்சிப்பை அருளும்படியா இயேசு சமாரியாவின் வழியாக சென்றார்.

1. கலிலேயாவிலிருந்து எருசலேமுக்குச் செல்லும் குறுக்கு வழி எந் மாகாணத்தின் வழியாகச் சென்றது ?

3. இயேசு சமாரியா வழியாகப் பிரயாணம் செய்த நோக்கம் என்ன ?

## தாகத்தைத் தீர்க்கும் தண்ணீர்

அவருடைய சீஷர்கள் போஜன பதார்த்தங்களைக் கொள்ளும்ப ஊருக்குள்ளே சென்றனர். இயேசுவோ சிகார் ஊருக்குள்ளேயிருந் கிணற்றண்டையில் உட்கார்தார். மத்தியான வேளையானபோது ஒ சமாரியா ஸ்திரீ தண்ணீர் மொள்ள வந்தாள், இயேசு பிரயாணத்தின களைப்படைந்திருந்தபடியால் அவளை நோக்கி தாகத்திற்கு தண்ணீ கேட்டார், இயேசு அவளோடு பேசுவதைக் கேட்டு ஆச்சரியமடைந் அவருக்குப் பிரதியுத்தரமாக !

"நீர் யூதன் நான் சமாரிய ஸ்திரீ தாகத்திற்குத் தா என்று என்ன டம்கேட்கிறதெப்படி ? என்றாள், (ஏனென்றால் யூதர், சமாரியர் உ யோகித்த பாத்திரத்தைக்கூட தொடுவதில்லை) யோவான் 34 : 9.

3. இயேசு தாகத்திற்குத் தண்ணீர் கேட்டவுடன், அவருக்குக் குடிக்க கொடுந்தாளா ?

இயேசு தாகத்திற்குத்தான் கேட்டார். ஆனால் சமாரிய ஸ்திரீயின் விரோதத்தைத் தாண்டுவதற்கு அதுவே போதுமானதாக இருந்தது. ஏனென்றால் சமாரியர்கள் எவ்வளவாய் யூதர்களால் வெறுக்கப்பட்டார் களோ அது போலவே அவர்களும் யூதர்களை வெறுத்தார்கள். அவர் ஒரு யூதன் என்பது அவளுக்குத் தெரியும் என்பதையும் அவள் ஒரு சமாரியப் பெண் என்றும் உடனே அவருக்குத் தெரியப்படுத்தினாள்.

இயேசுவோ ; தேவனின் ஈவும், தாகத்திற்குத் தா என்று உன்னிடம் கேட்கிறவர் இன்னார் என்பதும் உனக்குத் தெரிந்தால் நீயே அவரிடம் கேட்டிருப்பாய் அவர் உனக்கு ஜீவத் தண்ணீரைக் கொடுத்திருப்பார் ? என்று அவளுக்குப் பதில் உரைத்தார். யோவான் 4:10.

நமது உடலுக்குத் தண்ணீர் தேவைப்படும்பொழுது நமக்குத் தாகம் உண்டாகிறது, தண்ணீர் நமது உடலுக்கு எவ்வளவு அவசியமோ அது போலவே நம்முடைய ஆவிக்கும் ஏதோ ஒன்று அவசியமானதாக இருக்கின்றது. அதை நாம் கண்டுபிடிக்குமளவும் திருப்தியடையாதவர்களாக ஆவிக்குரிய தாகம் உடையவர்களாக இருக்கின்றோம்,

அதற்கு அவள் "ஐயா, மொள்ளுகிறதற்கு உம்மிடம் ஒன்றுமில்லை கிணறு ஆழம் அப்படியிருக்க எங்கேயிருந்து உமக்குத் ஜீவத் தண்ணீர் கிடைக்கும் ? நம்முடைய பிதாவாகிய யாக்கோபிலும் நீர் பெரியவரோ? அவர் இந்தக் கிணற்றை எங்களுக்குத் தந்தார். அவரும் அவர் பள்ளைகளும் அவர் மிருகங்களும் இதிலே குடித்ததுண்டே" என்றாள்.

யோவான் 4:11,12,

யாக்கோபு யூதர்களுக்கும் சமாரியர்களுக்கும் முற்பிதாவாக இருந்தார் ஆகவே அவர் யாக்கோபைக் காட்டிலும் தான் பெரியவர் என்று உரிமை பாராட்ட மாட்டார் என்று நிச்சயமாக இருந்தாள்.

அதற்கு இயேசு " இந்த தண்ணீரைக் குடிக்கிற எவனும் தாகமடைவான். நான் கொடுக்கும் தண்ணீரைக் குடிக்கிறவனோ ஒருக்காலும் தாகம் அடையான். நான் அவனுக்குக் கொடுக்கும் தண்ணீர் அவனுக்குள்ளே நித்திய ஜீவனுக்கேதுவாக ஊறுகிற நீர் ஊற்றாகும் என்றார். அந்த ஸ்திரீ அவரைப் பார்த்து ஐயா, எனக்குத் தாகமுண்டாகாமலும், நான் தண்ணீர் மொள்ள இவ்வளவு தூரம் வராமலிருக்கும்படி அந்தத் தண்ணீரை எனக்குத் தாரும்"? என்றாள், யோவான் 4:13-15

4, இயேசு கொடுக்கும் தண்ணீரைக் குடிக்கிறவர்கள் எதைப் பெற்றுக் கொள்ளுகிறார்கள் ?

இயேசு அவளது இருதயமாகிய கிணற்றின் ஆழத்தை ஆராயத் தொடங்கினார், அங்கே ஜீவத் தண்ணீர் இல்லை, அது பாவத்தினால் நிறைந்த சாக்கடையாயிருந்தது.

கிராமப் பெண்கள் தண்ணீர் எடுக்க அதிகாலையில் அல்லது குளிர்ந்த மாலை நேரத்தில்தான் செல்வது வழக்கம். இவள் மிகவும் துன்மார்க்க ஸ்திரீயாக இருந்தபடியால் மற்ற பெண்கள் இவளோடு செல்

வதற்குக்கூட அச்சப்பட்டதாகக் கூறப்படுகின்றது. ஆகவே இவள் மத்தியான வேளையில் சென்றாள்.

"அவர் நீ போய் உன் புருஷனை அழைத்துக்கொண்டு இங்கே வா என்றார், அந்த ஸ்திரீ : எனக்கு புருஷனில்லை என்று சொல்ல இயேசு அவளிடம் எனக்கு புருஷனில்லை என்று நீ சொன்னது சரிதான் உனக்கு ஐந்து புருஷர் இருந்தார்கள் இப்பொழுது 'உனக்கிருக்கிறவனோ உன் புருஷனல்ல; நீ சொன்னது உண்மையே என்றார்." யோவான் 4:16-18

இயேசு கடந்தகால மற்றும் இப்பொழுதுள்ள அவளுடைய விபச்சார ஜீவியத்தை எடுத்துக் கூறியபோது ஒரு ஒளி உதிக்க ஆரம்பித்தது. அவர் ஒரு தீர்க்கதரிசியாகத்தான் இருக்க வேண்டும் என்று நினைத்தாள். உடனே அவளைச் சஞ்சலப்படுத்திக் கொண்டிருந்த கேள்விகளுக்குப் பதிலைப் பெற்றுக்கொள்ள இதை நல்லத் தருணமாக எண்ணினாள்.

5. அவளுடைய ஜீவிய இரகசியத்தை எடுத்துக் கூறியபோது இயேசுவை யாராக இருக்கக்கூடும் என்று நினைத்தாள்?

அப்பொழுது அந்த ஸ்திரீ அவரிடம் : ஐயா; நீர் தீர்க்கதரிசி என்று காண்கிறேன், எங்கள் முன்னோர் இந்த மலையில் தொழுதுகொண்டார்கள் நீங்களோ தொழுதுகொள்ளவேண்டிய ஸ்தலம் எருசலேமிலிருக்கிறது என்கிறீர்கள் என்றாள். அதற்கு இயேசு அம்மா, என்னை நம்பு ; காலம் வருகிறது அப்பொழுது நீங்கள் பிதாவைத் தொழுதுகொள்வது இந்த மலையிலுமல்ல எருசலேமிலுமல்ல, நீங்கள் உங்களுக்கு தெரியாததைத் தொழுதுகொள்ளுகிறீர்கள், நாங்கள் எங்களுக்குத் தெரிந்திருக்கிறதைத் தொழுதுகொள்ளுகிறோம். ஏனெனில் இரட்சிப்பு யூதரிடமிருந்து வருகிறது. ஆயினும் காலம் வருகிறது அது வந்ததாயிற்று அப்பொழுது மெய்ப்பக்தர் பிதாவை ஆவியிலும் உண்மையிலும் தொழுதுகொள்வார்கள் அப்படிப்பட்டவர்களையே பிதா தம்மைத் தொழுதுகொள்ளுகிறவர்கள் ஆவியிலும் உண்மையிலும் தொழுதுகொள்ள வேண்டும் என்றார்,

யோவான் : 4;19-2.

6, சமாரியர்கள் எங்கே தொழுதுகொண்டு வந்தார்கள் ?

7. உண்மையாய்த் தொழுது கொள்ளுகிறவர்கள் எவ்விதம் தொழுது கொள்ள வேண்டும் ?

இந்த பதில் அவளுக்குத் திருப்தி அளிக்கவில்லை. ஏனெனில் எப்படியாவது சமாரியர்கள் சரியான இடத்தில்தான் தொழுதுகொண்டு

ருகிறார்கள் என்பதை நிரூபிக்க சில காரணங்களைத் தேடிக்கொண்டிருந்தாள், எங்கே தொழுதுகொள்ள வேண்டும் என்னும் கேள்வி இன்னமும் ஒரு பெரிய கேள்வியாகவே இருக்கிறது, இதற்கு பதில் கண்டுபிடிக்க அனேகர் நீண்ட யாத்திரைகளைச் செய்கின்றனர்; அவர் ஒரு தீர்க்கதரிசி என்பதை அவள் மறக்கவில்லை. ஆனால் யூதர்களும் சமாரியர்களும் எதிர்பார்த்துக் கொண்டிருந்த மேசியா என்னும் மேலான அதிகாரத்தை உடையவரிடமிருந்து பதிலை எதிர்பார்த்தாள்.

. அந்த ஸ்திரீ எதை நிரூபிக்க காரணங்களைத் தேடினாள்?

. அந்த ஸ்திரீயின் மனதில் இருந்த பெரிய கேள்வி என்ன?

அதற்கு அந்த ஸ்திரீ: கிறிஸ்து என்னப்படுகிற மேசியா வருகிறார் என்று எனக்குத் தெரியும், அவர் வரும்போது எல்லாவற்றையும் நமக்கு அறிவிப்பார் என்று சொல்ல இயேசு அவளிடம்: உன்னுடனே பேசுகிற நானே அவர் என்றார்.

அத்தருணத்தில் அவருடைய சீஷர் வந்து அவர் ஒரு ஸ்திரீயோடு பேசுகிறதைக் கண்டு ஆச்சரியப்பட்டார்கள் ஆகிலும் என்ன தேடுகிறீரென்றாவது ஏன் அவளுடனே பேசுகிறீரென்றாவது ஒருவனும் கேட்கவில்லை. அப்பொழுது அந்த ஸ்திரீ தன் குடத்தை வைத்துவிட்டு, ஊருக்குள்ளே போய், ஜனங்களைப் பார்த்து வாருங்கள்: நான் செய்த எல்லாவற்றையும் ஒரு மனுஷன் எனக்கு அறிவித்தார்; அவரைப் பாருங்கள்: அவர் கிறிஸ்துதானோ என்றாள். அப்பொழுது அவர்கள் ஊரிலிருந்து புறப்பட்டு அவரிடம் வந்துகொண்டிருந்தார்கள். யோவான் 4 : 25-30.

10. அவள் பட்டணத்திற்குள் சென்று ஜனங்களுக்கு அறிவித்தது என்ன?

கொளுத்தும் வெயிலிலே, திறந்த வெளியிலே கிணற்றண்டையில் இயேசுவும் சமாரிய ஸ்திரீயும் பேசிக்கொண்டிருந்தனர். இயேசு தன்னை யார் என்று அவளுக்கு அறிமுகப்படுத்திய பின்பு அவர்கள் சம்பாஷணையானது சகோதர மனப்பான்மையில் செல்கின்ற நேரத்தில் சீஷர்கள் வந்து சேர்ந்தனர். இது அவர்களுக்கு ஆச்சரியமாக இருந்தது. ஆனால் அந்த ஸ்திரீயோ இயேசுவின் போதனைகளைக் கேட்டுக் களிப்போடு தன் அக்கம் பக்கம் உள்ளவர்களுக்கும் அதைக் கூற ஓடோடிச் சென்றாள்.

“எங்கே தொழுதுகொள்ள வேண்டும்” என்ற கேள்வியைப்பற்றி இப்பொழுது அவள் கவலைப்படவில்லை. ஆனால் அதைவிட முக்கியமாக “இயேசுவை மேசியகவாக இருக்கக்கூடுமோ? என்ற புதிய கேள்வி

என்றை கேட்கலானுள். ஜனங்கள் அவரிடம் வந்து இயேசுவை தங்களிடம் தங்கியிருக்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டார்கள். அவ இரண்டு நாள் தங்கியிருந்த பிற்பாடு ஜனங்கள் அந்த ஸ்திரீயிடம், இ நாங்கள் விசுவாசிப்பது உன் பேச்சினிமித்தமல்ல, நாங்களே கேட்டு இவ மெய்யாகவே உலக இரட்சகர் என்று தெரிந்துகொண்டோம் என்று கள்''. யோவான் 4 : 42"

இந்தச் சம்பவம் ஏசாயா உரைத்த தீர்க்கதரிசனத்தின் ஒரு பாக தின் நிறைவேறுதலாக இருக்கின்றது.

'' இருளில் நடக்கின்ற ஜனங்கள் பெரிய வெளிச்சத்தைக் கண்டா கள் ''. ஏசாயா 9 : 2.

இந்த தீர்க்கதரிசனம் ஏதோ இந்த ஒரு கிராமத்திற்கு மட்டும் உரி தாக இல்லாமல் பல்லாயிரக்கணவர்களுக்குரியதாக மாறிவிட்டது.

இயேசு பாவ இருளிலிருந்து அந்த ஸ்திரீயை படிப்படியாக வெளி சத்தைக் காணச் செய்தார்.

1. அவர் அவளது பாவ ஜீவியத்தைக் குறித்துச் சொன்னபோ அவை உண்மையென அறிக்கையிட்டாள்.

2. அவர் அவளுடைய கேள்விக்கு பதிலளித்து தேவன் ஆவி லும் உண்மையிலும் தொழுதுகொள்ளப்பட வேண்டுமென்று எடுத்து காட்டினர்.

3. அவர் தாமே மேசியா என்று அவளுக்குச் சொன்னர். அவ அதை விசுவாசித்து மற்றவர்களிடத்திலும் சென்று துரிதமாக அறி வித்தாள்.

11. அவர் தாமே மேசியா என்று சொன்னபொழுது அந்த ஸ்திரீ செ தது என்ன ?

சீகார் என்ற கிராமம் ஒளிக்குள் நடத்தப்பட்டதோடு சீஷர்களு அதைக் கண்டடைந்தனர். எல்லா யூதர்களும் சமாரியர்களைப் புறக் கணித்தபடியே சீஷர்களும் புறக்கணித்துக் கொண்டு வந்தனர். மற்றவ கள் எவ்வளவாய் வெறுத்தாலும் தேவன் எவ்வளவாய் நேசிக்கிறு என்று கண்டடைந்தனர். சீஷர்கள் கிராமத்தில் தங்கியிருந்த இரண் நாட்கள் அவர்களுக்கு எவ்வளவோ நன்மையை விளைவித்தது.

## ஐசுவரியவானாகிய வாலிபத் தலைவனுக்கு இயேசுவின் உபதேசம்

### கலிலேயாவிலிருந்து இயேசு சென்ற கடைசிப் பிரயாணம்

இயேசு எங்கும் புகழ்படத் தக்கவரானார். கலிலேயாவிலிருந்து எருசலேமுக்கு அவர் சென்ற கடைசி பிரயாணத்தின்போது அவர் கூறுவதைக் கேட்பதற்கு திரளான ஜனக்கூட்டம அவரைச் சூழ்ந்துகொண்டதும் அப்பொழுது அவர்களுக்கு தேவனுடைய ராஜ்யத்தைக் குறித்துப் போதித்துக் கொண்டும் அவர்களுடைய சில கேள்விகளுக்கு பதில் அளித்துக்கொண்டும் வந்தார். தலைவர்களில் ஒருவன் அவரைச் சோதிக்கும்படி அவரிடத்தில் வந்து, "புருஷன் மனைவியைத் தள்ளிவிடுவது நியாயமா? என்று கேட்டான்.

இயேசு அவர்களுக்கு விவாகத்தைப் பற்றியும் விவாக ரத்து பற்றியும் பதில் கொடுத்து அவர்களோடு பேசிக்கொண்டிருந்தபோது சில பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளை ஆசீர்வதிக்கும்படியாக அவரிடத்தில் கொண்டுவர முயற்சி செய்து கொண்டிருந்தனர். அவர்கள் சீஷர்களை கடிந்து கொண்டார்கள். ஆனால் இயேசுவோ அக்குழந்தைகளைத் தம்மிடம் அழைத்து:

"சிறு பிள்ளைகள் என்னிடத்தில் வருகிறதற்கு இடங் கொடுங்கள்; அவர்களைத் தடைபண்ணாதிருங்கள்; தேவனுடைய ராஜ்யம் அப்படிப்பட்டவர்களுடையது. தேவனுடைய ராஜ்யத்தை சிறு பிள்ளையைப்போல் ஏற்றுக்கொள்ளாதவன் எவனும் அதில் பிரவேசிப்பதேயில்லை என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்" என்றார்.

மாற்கு 10: 14, 15

சிறு குழந்தைகள் இயேசுவிடம் வந்தபொழுது சீஷர்கள் கடிந்து கொண்டதை இயேசு அங்கீரித்தாரா?

### ஐசுவரியவானாகிய வாலிபத் தலைவன் உதவி கேட்குதல்,

ஐசுவரியவானாக இருந்த வாலிபத் தலைவன் ஒருவன் திரளான கூட்டத்திலிருந்து இயேசு செய்வதைப் பார்த்துக் கொண்டும், இயேசு சொல்வதைக் கேட்டுக்கொண்டுமிருந்தான், மத்தேயு, மாற்கு, லூக்கா இந்த மூன்று சுவிசேஷ எழுத்தாளர்களும் அவனைக் குறித்து எழுதினார்கள். லூக்கா அவனைத் தலைவனென்றும் மத்தேயு அவனை வாலிபனென்றும் குறிப்பிடுகின்றனர், மாற்கு இவ்வாறு எழுதுகிறார்:

"அவர் வழி நடந்து வெளியே செல்லுகையில், ஒருவன் அவரி
ஓடி வந்து முழங்கால் படியிட்டு: நல்ல போதகரே நித்திய ஜீவனைச் சு
தரிப்பதற்கு நான் என்ன செய்ய வேண்டும் என்று கேட்டான். அதற்
இயேசு: நீ என்னை நல்லவர் என்று சொல்வானேன்? தேவன் ஒருவ
தவிர நல்லவர் ஒருவருமில்லையே" மாற்கு 10:17, 18.

அவ் வாலிபன் 'நல்ல' (போதகரே) என்று குறிப்பிட்ட வார்த்தைக்கு "நீதியில் பரிபூரணமானவர்" என்று அர்த்தம், தேவனைத் தவி இந்த வார்த்தை வேறு யாருக்கும் பொருந்தாது. ஆகவே, இயே அவனைப் பார்த்து நீ என்னை நல்லவன் என்று சொல்வானேன்? என் கேட்டார். அவரை நல்லவர் என்று அழைக்க அந்தவனுக்கு அநே போதுமான காரணங்கள் இருந்தது. ஆனால் இயேசுவை அவன் தே குமாரனாக நினைக்கவில்லை அடுத்தபடியாக இயேசுவோடு பேசும்பொழு அவரை 'நல்ல போதகரே' என்று அழைத்தான்?

2. ஐசுவரியவானாகிய வாலிபன் எதற்காக ஏசுவிடம் வந்தான்?

அந்நாட்களில் விவாகரத்து சர்வ சாதாரணமாக இருந்த பிரிந்துபோன குடும்பங்களினிமித்தம் பிள்ளைகள் பலர் துன்பம் அனுபவி தனர். ஒருவேளை இந்த பிரச்சனையானது அந்த ஐசுவரியவானாகி வாலிபனுடைய கவனத்திற்குரியதாக இருந்திருக்கக் கூடும் தேவன் விவாகரத்தை ஆதரிக்கிறதில்லை என்றும் தள்ளுதற் சீட்டை எழுதிக் கொடுத்து அவளைத் தள்ளிவிடலாம் என்றும் மோசே கொடுத் கட்டளை அவர்களுடைய இருதயக்கடினத்தினிமித்தமே என்றும் இயே விளக்கியதை அவன் கேட்டுக்கொண்டிருந்தான். சிறு பிள்ளைகளின் மே அவர் கைவைத்து ஜெபிக்க வேண்டுமென்று கொண்டுவந்தவர்க சீஷர்கள் அதட்டியதையும் இயேசு அவர்களை அணைத்துக்கொண் அவர்கள்மேல் கைகளை வைத்து ஆசீர்வதித்ததையும் அவன் கண்டான் பின்பு சிறு குழந்தைகளை உதாரணமாக காட்டி நித்திய ஜீவனை சுத தரித்துக்கொள்ள சிறு குழந்தைகளைப்போல் ஒவ்வொருவரும் தேவனி விசுவாசம் வைக்கவேண்டும் என்று இயேசு போதித்தார். இவைக அவன் மனதில் ஆழமாகப் பதிந்ததால்தலைவன் இயேசுவுக்கு முன்பாக சென்று முழங்கால் படியிட்டு "நான் என்ன செய்ய வேண்டும்" என்றான் அதற்கு இயேசு கற்பனைகளைக் கைக்கொள் என்று கூறினர்.

தலைவன் இயேசுவைப் பார்த்து "எவைகளை" என்று கேட்டத மத்தேயு குறிப்பிடுகிறார். ஆனால் மாற்கு சுவிசேஷத்தில் ஒன்றும் கூற படவில்லை. அவர்களுக்கு அநேக கட்டளைகளும், முறைமைகளு நியமங்களும் கொடுக்கப்பட்டிருந்தன, அவைகள் அனேகமாக இருந்தப யால் ஒருவராவது சரிவர எல்லாவற்றையும் கைக்கொள்ள முடியவில் ஜனங்கள் கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறார்களா என்பதை

வனிப்பது தலைவர்களின் கடமையாக இருந்தது. கைக்கொள்ளத் தவ
றியவர்களை அவர்கள் நியாயந்தீர்க்க வேண்டும். அவன் நித்திய ஜீவனைப்
பெற்றுக்கொள்ள வேண்டுமென்றால் அவனும் கூட கற்பனைகளைக் கைக்
கொள்ளவேண்டும். ஆகவே அவன் "எந்தக் கற்பனைகளை?" என்று
கேட்டான். அதற்கு இயேசு மோசேயினால் கொடுக்கப்பட்ட தேவ
னுடைய ஆறு கற்பனைகளை அவனுக்கு ஞாபகப்படுத்தினார்.

"கொலை செய்யவேண்டாம், விபச்சாரம் செய்யவேண்டாம், களவு
செய்யவேண்டாம், பொய் சாட்சி சொல்லவேண்டாம், வஞ்சனை செய்ய
வேண்டாம், உன் தகப்பனையும் உன் தாயையும் கனம் பண்ணவேண்டும்
முதலிய கற்பனைகள் உனக்குத் தெரியுமே என்று சொல்ல, அவன்; போ
தகரே இவைகளையெல்லாம் என் சிறு வயது முதல் கைக்கொண்டிருக்
கிறேன் என்றான்." மாற்கு 10:20.

இயேசு அவனுக்கு எத்தனை கற்பனைகளை ஞாபகப்படுத்தினார்?

அவன் பக்தியோடு இவைகளையெல்லாம் கைக்கொண்டிருந்த
போதிலும் இன்னும் ஏதோ குறையுள்ளவனாக உணர்ந்தான். அநேகர்
நீண்ட புண்ய யாத்திரைகளையும், தான தருமங்களையும் இன்னும் பெரும்
தியாகங்களையும் செய்து நித்திய ஜீவனைப் பெற்றுக்கொள்ளப்
பிரயாசப்படுகின்றனர். இந்தத் தலைவன் ஏறக்குறைய எதையும் செய்ய
ஆயத்தமாக இருந்தான். அவனுடைய விசுவாசத்தை சோதிக்க ஏதோ
ஒன்றைச் செய்யும்படியாக இயேசு கூறினார், மாற்கு நமக்குக் கூறுவது;

பக்தியாக ஜீவித்த வாலிபன் நித்திய ஜீவனை உடையவனாக இருந்
தானா?

"இயேசு அவனை உற்றுப் பார்த்து, அவனில் அன்பு கூர்ந்து;
உன்னிடம் குறைவு ஒன்று உண்டு: நீ போய். உள்ளவற்றை விற்று
தரித்திரருக்குக் கொடு; அப்பொழுது பரலோகத்தில் உனக்கு ஐசுவரிய
மிருக்கும்; பின்பு வந்து என்னைப் பின்பற்று என்றார். அவன் மிகுந்த
ஆஸ்தியுள்ளவனாயிருந்தபடியால், இந்த வார்த்தையைக்கேட்டு முகம்
வாடி, துக்கத்தோடே போய்விட்டான்." மாற்கு 10:21-22.

அவனிடம் என்ன குறை இருப்பதாக இயேசு கூறினார்?

அவனுடைய குறையை இயேசு எடுத்துக் கூறியபோது அந்த
வாலிபன் சந்தோஷமாக திரும்பிச் சென்றானா?

ஐசுவரியவானாகிய வாலியத் தலைவன் பணம், அரசியல் செல்வாக்கு
ஆரோக்கியம், அழகு ஆகிய வாழ்க்கையின் சகல சௌகரியங்களையும்
உடையவனாக இருந்தான்; அத்துடன் அவனுடைய வாழ்க்கையின் நல்
வருடங்கள் அவனுக்காகக் காத்துக் கொண்டிருந்தது. அவைகளையெல்
லாம் தேவனுடைய ஊழியத்திற்குச் செலவிட விரும்பியும் தன் ஐசுவரி
யத்தை மட்டும் கொடுக்க விரும்பவில்லை கற்பனைகள் என்னும் பரீஷை
வந்தபொழுது இவைகளையெல்லாம் என் சிறு வயது முதல் கைக்

கொண்டிருக்கிறேன்'' என்று சொல்லி ''தேர்ச்சி பெற்றான். 7ஆம்
இயேசு, நீ போய் உன்னவற்றை விற்று தரித்திரருக்குக் கொடுத்துவிட்டு
என்னைப் பின்பற்றிவா என்று சொன்னபோது விசனமாக பரிதவி
த்துவிட்டான்.

அவர் சந்தித்த எல்லா ஐசுவரியவான்களையும் பார்த்து அவ
களுக்குரியதையெல்லாம் விற்றுவிட்டு இயேசுவை பின்பற்றும்படியா
கூறவில்லை. அவர்களுடைய ஆவிக்குரிய நிலைமைக்கேற்றவண்ண
அவர்களுக்கு ஆலோசனை கூறினார்.

7. செல்வந்தர்கள் எல்லாரும் தங்கள் செல்வத்தை விட்டுவிடவே
டும் என்று இயேசு போதித்தாரா?

''இயேசு சுற்றிப்பார்த்து: ஐசுவரியமுள்ளவர்கள் தேவனுடை
ராஜ்யத்தில் பிரவேசிப்பது அரிது என்று தம் சீஷரிடம் சொன்னார். சீ
அவருடைய வார்த்தைகளைக் கேட்டு பிரமித்தார்கள். இயேசு பின்னு
அவர்களைப் பார்த்து: பிள்ளைகளே, தேவனுடைய ராஜ்யத்தில் பிரவே
பது எவ்வளவு அரிது. ஐசுவரியவான் தேவனுடையராஜ்யத்தில் பிர
சிப்பதைப் பார்க்கிலும், ஒட்டகம் ஊசியின் காதில் நுழைவது எளி
என்றார். அவர்கள் மிகவும் பிரமிப்படைந்து அப்படியானால் ய
இரட்சிக்கப்படக்கூடும் என்று தங்களுக்குள்ளே பேசிக் கொண்ட
கள்.'' மாற்கு 10:23-26.

8. யார் தேவனுடைய ராஜ்யத்தில் பிரவேசிப்பது அரிது?

நியாயப்பிரமாணங்களைக் கைகொள்ளுகிறவர்களுக்கு நிர்க்கதி
கள் செல்வத்தை ? வாக்குத்தத்தம் பண்ணவில்லையா ? பொதுவாக ஒ
மனிதன் செல்வாக்குள்ளவனாக இருப்பது அவன் பக்தியினால் என்
நம்புகின்றனர். இவர்களோ ஐசுவரியவான்களுமல்ல தரித்திரருமல்
ஆனால் தங்கள் வீடுகளையும் பெற்றோர்களையும், படகுகளையும், வலைக
யும், எல்லாவற்றையும் விட்டு விட்டு வந்தார். இந்த ஐசுவரியவானா
வாலிபனே இரட்சிக்கப்படுவது அரிதானால் பின் யார்தான் தேவ
டைய இராஜ்யத்தில் பிரவேசிக்கக்கூடும்?

''இயேசு அவர்களை உற்றுப் பார்த்து இது மனுஷரால் ஆகாத
தான். தேவனாலே ஆகாததல்ல; தேவனால் எல்லாமாகும் என்ற
பேதுரு அவரிடம்: இதோ நாங்கள் எல்லாவற்றையும் விட்டு உம்மை
பின்பற்றினோமே என்று சொல்லத் தொடங்கினான். அதற்கு இயேசு
என்னிமித்தமாகவும் சுவிசேஷத்தினிமித்தமாகவும் வீட்டையாவது
சகோதரரையாவது, சகோதரிகளையாவது, தாயையாவது, தகப்பனையா
வது, மனைவியையாவது, பிள்ளைகளையாவது, நிலங்களையாவது விட்
வன் எவனும், இப்பொழுது இம்மையிலே துன்பங்களோடுகூட நூற

துணையக வீடுகளையும், சகோதரரையும், சகோதரிகளையும், தாய்களையும், பிள்ளைகளையும் நிலங்களையும் மறுமையிலே நித்திய ஜீவனையும் அடைவான் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆகிலும் முந்தினோர் அநேகர் பிந்தினோரும், பிந்தினோர் அநேகர் முந்தினோருமாவார்கள் என்றார்." மார்கு 10:28-31

9. மனுஷரால் ஆகாதது யாரால் ஆகும்?

சீஷர்களால் சமுடையவனாக எண்ணப்பட்ட ஐசுவரியவானாகிய வாலிபத் தலைவனை இயேசு பரிதாபமாக பார்த்தார், மனிதர்களுக்கு முன்பாக முதல் ஸ்தானத்தை வகித்த அவன் தேவனுக்கு முன்பாக கடைசியில் நின்றான். சிறு குழந்தையைப்போல் விசுவாசத்தோடு முழங்கால் படியிட்டான். ஆனால் தியாகத்தை எதிர்பார்த்தபோதோ அதை அதை இழந்துவிட்டான். சீஷர்களும் எல்லாவற்றையும் தியாகம் செய்து வந்தார்கள் இப்பொழுது தங்கள் விசுவாசத்தைக்கூட இழந்து விடுவோமோ என்று பயந்துக்கொண்டு இருந்தனர். இயேசு அவர்களுக்குப் பிரதியுத்தரமாக தேவனால் முடியாத காரியம் ஒன்றுமில்லை என்று கூறினார். இயேசுவுக்காக எல்லாவற்றையும் விட்டுவிட்டு அவரைப் பின்பற்றுகிறவர்கள் அவர்களை எதிர்கொள்ளும் துன்பங்களுக்கோ, எதிர்ப்புகளுக்கோ பயப்படவேண்டிய அவசியமே இல்லை, ஏனெனில் உலகத்தாரால் புகழப்பட்டவர்கள் பரலோகத்தில் பரிதவிக்கப்பட்டவர்களும், உலகில் தங்களைத் தாழ்த்துகிறவர்கள் பரலோகத்தில் அதிக கனத்திற்குரியவர்களுமாக இருப்பார்கள். நம்முடைய விசுவாசம் சரியாக இருக்குமென்றால் நம்கிரியைகள் அங்கீகரிக்கப்படும், ஏனெனில் "விசுவாசம்" இல்லாமல் தேவனுக்குப் பிரியமாயிருப்பது கூடாத காரியம், எபிரேயர் 11:6.

10. மனிதர்களுக்கு முன்பாக முதல் ஸ்தானத்தை வகித்த வாலிபன் தேவனுக்கு முன்பாக எப்படியிருந்தான்?

11. உலகத்தில் தங்களைத் தாழ்த்துகிறவர்கள் பரலோகத்தில் எப்படியிருப்பார்கள்?

அவர்தான் மேசியா என்று 4-ம் பாடத்தில் கிராம பெண்ணுக்கு இயேசு அறிவித்தபோது அந்த மகிழ்ச்சியான செய்தியை கிராமம் முழுவதும் சென்று மிகுந்த சந்தோஷத்துடன் பரப்பினாள், இயேசு அந்த தலைவனைப்பார்த்து "என்னைப்பின்பற்றிவா" என்றபொழுது அவனுடைய முகத்தில் துக்கம் இயேசுவின் சீஷர்களையும் பார்த்தால் அவர்களுக்கு அநேக சந்தேகங்கள் தோன்றின. நாம் தேவனுடைய வசனத்தை எவ்வாறு ஏற்றுக்கொள்ளுகின்றோமோ அவ்வாறு அது நம்மை மாற்றுகின்றதோடு நண்பர்களையும் பாதிக்கின்றதாக இருக்கின்றது,

இயேசு கிராமத்துப் பெண்ணுக்கு எங்கே தொழுது கொள்ள வேண்டும் என்ற கேள்விக்குப் பதிலளித்தார். என்ன செய்யவேண்டும் என்ற ஐசுவரியவானும் வாலிபத் தலைவனின் கேள்விக்கும் பதிலளித்தார். உங்கள் கேள்விகளுக்கு பதில் அளிப்பார். தொழுதுகொள்வது பற்றிய, நீதியைப்பற்றிய, மற்றும் நித்தியத்தைக் குறித்த கேள்விகள் அநேகரை குழப்புகின்றதாக இருக்கின்றது. "என்னைப் பின்பற்றி வாருங்கள்" என்ற அழைப்புக்கு நீங்கள் செவிகொடுத்தால் அவர் பதில்கள் உங்களுக்கு உதவி செய்யும்.

உங்கள் கேள்விகள் எதுவாயிருந்தாலும் உங்கள் ஆசிரியருக்கு எழுதி அனுப்புங்கள். இப்போது உங்கள் வேத பாகங்களைத் திரும்ப வாசியுங்கள்.

### பாடம் ஆறு

## இயேசு மாபெரும் வைத்தியர்

இயேசு ஜனங்களின் பலவிதமான வியாதிகளிலிருந்தும் அவர்களை சுகமாக்கினார். ஏசாய 35:5-ல் "அப்பொழுது குருடரின் கண்கள் திறக்கப்பட்டு, செவிடரின் செவிகள் திறவுண்டுபோம்" என்றுரைத்தபடியே நடந்தது. சுவிஷேங்களில் குறிக்கப்பட்டுள்ள 35 அற்புதங்களை விவரித்திருக்கின்றபடியே செவிடர்களின் காதுகள் திறவுண்டன. ஊமையர் பேசினர், குருடர் பார்வையடைந்தனர், முடவர் எழுந்து நடந்தனர் மேலும் ஜுரம், நீர்க்கோவை, திமிர்வாதம், வலிப்புநோய், குஷ்டரோகம் இன்னும் அநேக விதமான வியாதிகளையும் இயேசு சுகமாக்கினார்.

1. இயேசு செய்த அற்புதங்கள் எங்கே குறிக்கப்பட்டுள்ளது?

பிறவிக் குருடனாக இருந்தவனுக்கு இயேசு பார்வையளித்ததை யோவான் எழுதுகிறார் அவர் அப்பாற் போகையில் பிறவிக்குருடன் ஒருவனைக் கண்டார், அவர் சீஷர் அவரிடம் ரபீ, இவன் குருடனாய்ப் பிறந்தது யார் செய்த பாவம்? இவன் செய்ததோ இவன் பெற்றோர் செய்ததோ என்று கேட்டார்கள். அதற்கு இயேசு: அது இவன் செய்த பாவமுமல்ல, இவன் பெற்றோர் செய்த பாவமுமல்ல, கடவுளின் கிரியைகள் இவனிடம் வெளிப்படும் பொருட்டே இப்படிப் பிறந்தான்.

2. இந்த மனிதன் குருடனாகப் பிறந்ததற்குக் காரணம் என்ன என்று சீஷர்கள் நினைத்தனர்?

பகற்காலமிருக்குமட்டும் என்னை அனுப்பினவரின் கிரியைகளை நாம் செய்ய வேண்டும். ஒருவனும் வேலை செய்ய முடியாத இராக்காலம்

..து நான் உலகத்திலிருக்கும் நாளெல்லாம் நான் உலகத்திற்கு ஒளி
..ன்றூர் இவைகளைச் சொல்லி தரையிலே துப்பி, உமிழ் நீரினல் சேர்
..ண்டாக்கி அந்தச் சேற்றைக் குருடனுடைய கண்களில் பூசி, நீ போய்
..லோவாம் குளத்திலே கழுவு என்றூர். சீலோவாம் என்பது அனுப்பப்,
..ட்டவர் என்று பொருள்படும். அப்படியே அவன் போய் கழுவி கண்
..ரிந்தவனய் திரும்பினன். அப்பொழுது அயலகத்தாரும், அவனைப்
..ச்சைக்காரனய் இதற்கு முன் கண்டிருந்தவர்களும், உட்கார்ந்து
..சைக் கேட்டுக் கொண்டிருந்தவன் இவனே அல்லவா என்றூர்கள்.
..ர் அல்ல, அவனைப் போலிருக்கிறன் என்றூர்கள். அவனே நான்தான்
..வன் என்றூன். ஆகவே, அவர்கள் அவனிடம் உன் கண்கள் திறவுண்
..து எப்படி என்று கேட்க, அவன் இயேசு எனப்பட்டவர் சேறுண்
..க்கி என் கண்களில் பூசி சீலோவாமுங்குப் போய்க்கழுவு என்றூர் அப்
..யே நான்போய்க் கழுவிப் பார்வையடைந்தேன்என்றூன்,அப்பொழுது
..வர்கள் அவனிடம் அவர் எங்கே என்று கேட்க, எனக்குத் தெரியாது
..றூன் யோவான் 9:1-12.

3. இயேசு குருடனுடைய கண்களில் சேற்றைப் பூசியபின்பு எங்கே போய்க் கழுவச் சொன்னூர்?

4. குணமான அந்த மனிதனைப் பார்த்த அயலகத்தார் என்ன நினைத்தனர்?

பரிசேயர் குணமானவனை விசாரணை செய்தல்

இயேசுவின் நாட்களிலே பரிசேயர் என்று அழைக்கப்பட்ட மார்க்க
..பந்தமான பலத்த பெருங்கூட்டம் ஒன்று இருந்தது. அவர்கள் தீர்க்க
..சிகளால் முன்னறிவிக்கப்பட்டபடியே வரப்போகும் மேசியாவைக்
..த்து போதித்துக்கொண்டு வந்தும், அவரைப் பற்றி பல தவறுன
..ப்பிராயங்களை உடையவர்களாயிருந்தபடியால் அவர் வந்தபோது
..ரை அறிந்து கொள்ளவில்லை.

முன் குருடனுயிருந்த அவனைப் பரிசேயரிடத்திற்குக் கொண்டு
..ஞர்கள், சேறுண்டாக்கி அவன் கண்களைத் திறந்த நாள் ஓய்வுநாள்
..லால் பரிசேயரும் அவனைப் பார்த்து, எப்படிப் பார்வையடைந்தாய்
..று திரும்பவும் கேட்டார்கள். அதற்கு அவன், அவர் என் கண்களில்
..ற்றைப் பூசினூர், கழுவினேன், காண்கிறேன் என்றூன். அதைக்
..ட்ட பரிசேயரில் சிலர், இந்த மனுஷன் தேவனிடத்திலிருந்து வந்த
..ல்ல, இவன் ஓய்வு நாளை ஆசரிக்கவில்லையே என்றூர்கள். வேறு சிலர்,
..யாயிருக்கிற மனுஷன் இப்படிப்பட்ட அடையாளங்களை எப்படிச்

செய்வான் என்றார்கள். இவ்விதமாய் அவர்களுக்குள்ளே பிரிவினையுண்
யிற்று. அவர்கள் மறுபடியும் குருடனைப் பார்த்து, உன் கண்களைத் தி
தானே அவனைக் குறித்து நீ என்ன சொல்லுகிறாய் என்று கேட்க, அ
தீர்க்கதரிசி என்றான். அவன் குருடனாயிருந்து பார்வையடைந்த
யூதர் நம்பாமல்; பார்வையடைந்தவனுடைய பெற்றோரை அழை
த்து. அவர்களிடம், குருடனாய்ப் பிறந்தான் என்று நீங்கள் சொல்லு
உங்கள் மகன் இவன்தானா? இவனானால் இவனுக்கு இப்போது க
தெரிகிறது. எப்படி என்று கேட்க, அவன் பெற்றோர், இவன் எங்
மகன் தான் என்றும், குருடனாய்ப் பிறந்தானென்றும் எங்களுக்குத் தெ
யும். இப்பொழுது இவன் பார்வையடைந்தவகையே எங்களுக்குத் தெ
யாது. இவனைக் கேளுங்கள். இவன் பெரியவன். இவனே தன் காரி
த்தைச் சொல்லுவான் என்றார்கள். அவனுடைய தாய் தகப்பன்ம
யூதருக்குப் பயந்து இப்படிச் சொன்னார்கள். ஏனெனில் அவரை கிறிஸ்
என்று எவனாவது அறிக்கை பண்ணுவானானால் அவனைச் சபைக்கு வில
வைக்க வேண்டுமென்று யூதர் அதற்கு முன்னமே கட்டுப்பாடு செ
இருந்தார்கள். இதனிமித்தம் அவன் பெற்றோர் இவன் பெரியவன் இ
வனைக் கேளுங்கள் என்று சொன்னார்கள். ஆகவே குருடனாயிரு
மனுஷனை அவர்கள் இரண்டாந்தரம் அழைத்து, நீ தேவனுக்கு மகிமை
செலுத்து. இந்த மனுஷன் பாவியென்று எங்களுக்குத் தெரியும் என்
கள். அவனோ அதைக் கேட்டு, அவர் பாவியோ அல்லவோ எனக்கு
தெரியாது. ஒன்றுதான் எனக்குத் தெரியும். நான் குருடனாயிருந்தே
இப்பொழுது காண்கிறேன் என்று சொன்னான். அவர்கள் உனக்
என்ன செய்தான். உன் கண்களை எப்படித் திறந்தான் என்று அவனை
கேட்க, அவன் முன்னமே உங்களுக்குச் சொல்லியாயிற்று நீங்கள் கேள
மற் போனீர்கள் மறுபடியும் நீங்கள் அதைக் கேட்க விரும்புகிறதென்ன
நீங்களும் அவருக்குச் சீஷராக விரும்புகிறீர்களோ என்று சொன்ன
அப்பொழுது அவர்கள் அவனை வைது நீ அவனுடைய சீஷன் நாங்களோ
மோசேயின் சீஷர். மோசேயோடு கடவுள் பேசினாரென்று எங்களுக்கு
தெரியும். இவன் எங்கேயிருந்து வந்தவனோ எங்களுக்குத் தெரியா
என்றார்கள். அதற்கு அந்த மனுஷன், இதுதான் ஆச்சரியம், அவ
எங்கேயிருந்து வந்தாரென்று உங்களுக்குத் தெரியாதோ? அவர் எ
கண்களைத் திறந்தாரே, கடவுள் பாவிகளுக்குச் செவிசாய்க்கிறதில்
யென்று நமக்குத் தெரியும். ஒருவன் தேவபக்தியுள்ளவனாயிருந்
அவருக்குச் சித்தமானதைச் செய்வானானால், அவனுக்குச் செவி சாய்
பார். பிறவிக் குருடனுடைய கண்களை ஒருவன் திறந்தான் என்று உலக
உண்டானது முதல் கேள்விப்பட்டதேயில்லை. அவர் தேவனிடமிருந்

வந்திருந்தாலொழிய அவர் யாதொன்றும் செய்ய முடியாது என்ருன், அதைக் கேட்ட அவர்கள் முழுவதும் பாவத்தில் பிறந்த நீயா எங்களுக்குப் போதிக்கிருய் என்று சொல்லி அவனை வெளியே துரத்திவிட்டார்கள்.

5. இயேசு அவனுடைய கண்களை எந்த நாளில் திறந்தார்?

6. பரிசேரியர் இயேசுவை ஏன் கண்டனம் பண்ணிஞர்கள்?

7. அவனுடைய பெற்ருேர்கள் ஏன் பயந்தார்கள்?

8. விசாரணை முடிந்த பிற்பாடு பரிசேயர்கள் அந்தக் குருடனை என்ன செய்தார்கள்?

"அவனை அவர்கள் வெளியே துரத்திவிட்டதை இயேசு கேள்விப்பட்டு அவனைக் கண்டுபிடித்து; தேவனுடைய குமாரனிடத்தில் விசுவாசம் வைக்கிருயா? என்ருர். அதற்கு அவன் அவரில் நான் விசுவாசம் வைக்கும்படி அவர் யார்? ஆண்டவரே என்ருன், இயேசு அவனைப் பார்த்து; நீ அவரைக் கண்டிருக்கிருய் உன்னுடனே பேசுகிறவரும் அவர்தான் என்ருர் உடனே அவன் விசுவாசிக்கிறேன் ஆண்டவரே என்று சொல்லி; அவரைப் பணிந்துகொண்டான்." யோவான் 9:13-33.

அவனைக் குறித்து சீஷர்கள் நினைத்தது என்ன?

யாரோ ஒருவனுடைய பாவத்தின் காரணமாகவே இந்த மனிதன் குருடனாய்ப் பிறந்திருக்கிருன் என்று சீஷர்கள் நிச்சயித்தனர். ஒருவருடைய பெலவீனமும்; குறைகளும் பாவத்தின் தண்டனையே என்று பொதுவாக நினைக்கின்றனர். ஆனால் பிறவிக்குருடனுக்கு இந்த நியதி பொருந்தாது. குருடனாகப் பிறந்தவன் எப்படி அவ்வளவு பெரிதான ஒரு பாவத்தைச் செய்திருக்கமுடியும்! சீஷர்கள்இரண்டு காரணங்களைக்கூறி இயேசு என்ன சொல்லுவார் என்று எதிர்பார்த்தனர். அவைகள் இரண்டுக்குமே இயேசு பதில் கொடுக்கவில்லை. பெலவீனமும் வியாதிகளும் எப்பொழுதுமே பாவத்தின் தண்டனையாக வருவதில்லை என்பதை அவர்களுக்குக் கற்பித்தார். சீஷர்கள் பிரச்சினையின் காரணத்தைப் பெரிதாக எண்ணிப் பார்த்துக் கொண்டிருந்தனர். ஆனல். இயேசுவோ பிரச்சினையைவிட குணமாக்குதலை பெரிதாக எண்ணிஞர். சில நோய்கள் இயற்கையின் காரணமாக உண்டாகின்றன. அவைகளுக்கும் பாவத்திற்கும் எப்பேற்பட்ட சம்பந்தமும் இல்லை.

அவனைக் குறித்து அவனது அயலகத்தார் நினைத்தது என்ன?

அவனுடைய அயலகத்தார் அவனை இதுவரைக்கும் ஒன்றுக்கும் உதவாதவனாக தன்னுடைய வாழ்க்கைத் தேவைகளுக்காக மற்றவர்களுடைய உதவியை எதிர்பார்த்துக் கொண்டிருந்த ஒரு பிச்சைக்காரனாகப் பார்த்தனர். ஆனால் இப்பொழுதோ அவன் பார்வையடைந்து விட்டான். அவர்களுக்கே இது புதுமையாக இருந்தது. இவன் அந்த குருடன்தானா? அவன் எப்படிப் பார்வையடைந்தான்? பரிசேயர்கள் என்ன சொல்லுவார்கள்? அவனும் அவனுடைய பெற்றோரும் அயலகத்தாரும். அவர்களில் சிலர் பரிசேயர்களாக இருந்திருக்கக்கூடும். யாவரும் ஏகமனதாக இவன் பிறவிக்குருடன் என்று ஒத்துக்கொண்டனர். அவனே பார்வையடைந்து மெய்யாகவே காண்கிறான் என்றனர். அந்தப் பிச்சைக்காரன் நற்குணசாலியாக இருந்தான். அவர்கள் அவனை சபித்த போதிலும் பயமுறுத்தியபோதிலும், குற்றப்படுத்தினபோதிலும் சபையிலிருந்து தள்ளிவைத்தபோதிலும் அவன் இயேசுவுக்கும் அவன் கொடுத்த சாட்சிக்கும் உண்மையுள்ளவனாக நின்றான்.

பரிசேயர் அவனைக் குறித்து என்ன நினைத்தனர்?

வியாதிகளெல்லாம் வருவதற்குக் காரணம் பாவமே என்று பரிசேயர்கள் போதித்து வந்தனர். ஆகவே அந்தக் குருடன் நிச்சயமாக ஒரு பாவி என்று நினைத்ததால் அவனை இயேசுவுக்கு எதிராக பயன்படுத்த விரும்பினர். விவாகரத்து செய்யும் விஷயத்தில் இயேசுவைக் குற்றம் கண்டுபிடிக்க (5-ம் பாடம்) முயற்சி செய்து தோல்வியடைந்தனர். ஒரு மனிதன் ஓய்வுநாளில் அவனுடைய உமிழ் நீரினால் கண்களைத் துடைத்தாலும் அது சட்டத்துக்கு விரோதமானது என்றும், அந்த உமிழ் நீரில் ஏதோ சுகமளிக்கும் வல்லமை இருந்தது என்றும் நினைத்தனர். இயேசு உமிழ் நீரைக் குழைத்து சேறுண்டாக்கினார் என்று கேள்விப்பட்ட உடனே அவர்கள் இந்தப் பிச்சைக்காரனை அவருக்கு விரோதமாக ஒரு சாட்சியாக பயன்படுத்திக் கொள்ளலாம் என்று மகிழ்ந்து கொண்டிருந்தனர். ஏமாற்றமடைந்த பரிசேயர்கள் அவனை சபையிலிருந்து தள்ளி வைத்தனர். அதினிமித்தம் அவன் இனி அவர்களுடைய மார்க்க சம்பந்தமான எக்கூட்டங்களிலும் பங்கு கொள்ள முடியாதவனானான்.

இயேசு அவனைக் குறித்து என்ன நினைத்தார் ?

பிறவிக் குருடனைப் பற்றியும் அவன் பார்வை இல்லாமையைப் பார்க்கும் மேலானவைகளை இயேசு எண்ணிப்பார்த்தார். அவருடைய பிதாவின் சித்தத்தை நிறைவேற்றிக்கொண்டு இருந்த வேளையில் அங்கே ஒரு அவசரத் தேவை அவருடைய கவனத்திற்குரியதாக இருந்தது. அவர் சீஷர்களுடைய கேள்விகளுக்கு பதில் அளித்து தேவனின் கிரியைகள் இவனிடம் வெளிப்படும் பொருட்டே இப்படிப் பிறந்தான் என்றார். உமிழ்நீரினால் சேறுண்டாக்கி அந்தச் சேற்றை குருடனுடைய கண்களில் பூசி கழுவும்படியாக அவனை அனுப்பிவிட்டார். அதற்கு பின்பு அவனைப் பரிசேயர்கள் துரத்திவிடும்வரை அவர் சந்திக்கவேயில்லை. தேவனுடைய வல்லமையைக் குறித்து சாட்சி கொடுக்கும்படியாக அவன் தனிமையில் விடப்பட்டான் பரிசேயர்களோடு செய்த தர்க்கத்தின்மூலம் அவனுக்கு இயேசுவின் மேலிருந்த விசுவாசம் பெருகியது. முதலில் அவன் அவரை "இயேசு எனப்பட்டவர்" என்றும் பின்பு அவர் "தீர்க்கதரிசி" என்றும் கடைசியாக "அவர் தேவனிடமிருந்து வந்தாலொழிய அவர் ஒன்றும் செய்ய முடியாது" என்றும் கூறினன். இதற்குப் பின்பு இயேசு அவனைக் கண்டுபிடித்து அவனோடு சம்பாஷித்தார். அப்பொழுது அவன் விசுவாசிக்கிறேன் ஆண்டவரே என்று சொல்லி அவரைப் பணிந்துக் கொண்டான். வெறும் மரியாதைக்காக இதைச் செய்யாமல் அவரை மெய்யாகவே தொழுதுகொள்ள அப்படிச் செய்தான். அந்தக் குருடன் வெறும் பகலின் ஒளியைக் காண்பதைவிட மேலான ஒன்றையும் கண்டான். அதுவே உலகத்தின் ஒளியாகிய - இயேசு.

9. இயேசு அவனைக் கண்டுபிடித்து சம்பாஷித்த பொழுது அவன் என்ன செய்தான் ?

10. அந்தக் குருடன் வெறும் பகலின் ஒளியைக் காண்பதைவிட மேலான வேறு எதைக் கண்டான் ?

சில பரிசேயர்கள் இன்னும் அவரில் குற்றம் கண்டுபிடிக்கக் காத்துக் கொண்டிருக்கின்றனர். அவர்களைக் குறித்து ஜாக்கிரதையாயிருக்கும்படி சீஷர்களுக்கு எச்சரிக்கை கொடுத்தார்.

"வேதபாரகரும் பரிசேயரும் மோசேயினுடைய ஆசனத்தில் உட்கார்ந்திருக்கிறார்கள். ஆகையால், நீங்கள் கைக்கொள்ளும்படி அவர்கள் உங்களுக்குச் சொல்லுகிற யாவையும் கைக்கொண்டு செய்யுங்கள். அவர்கள் செய்கையின்படியோ செய்யாதிருங்கள். ஏனெனில், அவர்கள் சொல்லுகிறார்கள் சொல்லியும் செய்யாதிருக்கிறார்கள்" மத்தேயு 23 : 2, 3.

ஒரு கோப்பையை எப்படித் தேனினாலோ அல்லது விஷத்தா
நிரப்பி வைக்க முடியுமோ அதுபோலவே நம்முடைய இருதயத்தை
நன்மை அல்லது தீமையினால் நிரப்பிவைக்க முடியும். நன்மைய
வைகளை நாம் தெரிந்துகொள்ளக்கூடும். ஆனால் தேவனுடைய உ
யின்றி போதுமான அளவை நம்மால் பெற்றுக்கொள்ள முடியாது.

11. நன்மையானவைகளைத் தெரிந்து கொள்ள யார் நமக்கு உ
செய்யக்கூடும்?

## இயேசுவும் நீங்களும்

யாருடைய பாவம் என்ற சீஷர்களுடைய கேள்விகளுக்கு இயேசு
பதில் அவர்கள் எதிர்பார்த்த மாதிரி கிடைக்கவில்லை. ஆனால் மிக
நல்ல பதிலாக இருந்தது. அவர்கள் ஆவிக்குரிய குருட்டாட்டத்
இருந்தனர். இயேசு அவர்களுக்கு ஒளியைத் தந்தார். மனிதர்கள
நாம் ஆவிக்குரிய குருடர்களாக இருப்பது சகஜமே. அவ்வப்பொ
அவரவர் பெலவீனங்களையும், வியாதிகளையும், பாவங்களையும் பார்
தவறிவிடுகிறோம். கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவில் தங்கள் நம்பிக்
வைப்பவர்களுக்கு அவரிடத்தில் ஒரு பதில் உண்டு. அவர் உரை
தாவது:

"என் வார்த்தையில் நிலைகொண்டிருந்தால மெய்யாகவே சீ
என் சீஷர் சத்தியத்தை அறிந்துகொள்வீர்கள். சத்தியம் உங்க
சுயாதீனராக்கும் என்றார்." யோவான் 8 : 31

இயேசுவின் சீஷர்கள் எவ்விதம் அவரிடத்தில் சென்று தார
மாக குருடனைப்பற்றி கேள்வி கேட்டார்களோ அதே வண்ணமே நா
அவரண்டை சென்று நம்முடைய பிரச்சினைகளுக்கும் பதில் கேட்கலாம்

"என் வார்த்தையைக் கேட்டு என்னை அனுப்பியவரை ந
கிறவன் நித்திய ஜீவனை உடையவன்." யோவான் 5 : 24.

12. யார் நித்திய ஜீவனையுடையவர்களாக இருக்கின்றனர்?

ஜெபம்; சர்வ சிருஷ்டி கர்த்தாவே, இயேசுவின் போதனைக
புரிந்துகொள்ளவும், அவைகளைக் கைக்கொள்ளவும் அதன் மூலம் எ
வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு பதில் கண்டுபிடிக்கவும் எனக்கு உத
செய்யும். சகல தீமையானவைகளையும் விட்டு விலகி அவருடைய
களில் நடக்க எனக்கு தைரியமும் பெலனும் அருளும்.

பாடம் ஏழு

## தேவன் கேட்பது என்ன என்று இயேசு கூறுதல்

இயேசு தன்னைப் போலவே ஒரு பெரிய போதகராக இருப்பார் என்று கூறின மோசே, இஸ்ரவேல் ஜனங்களிடத்தில் ஒரு கேள்வியைக் கேட்டார். அதே கேள்வியை இன்றைக்கும் ஜனங்கள் கேட்கின்றனர். 700 வருடங்களுக்குப் பிற்பாடு இயேசு எங்கே பிறப்பாரென்று முன்னறிவித்தவராகிய மீகா தீர்க்கதரிசியும் அதே கேள்வியைக் கேட்டார். "என்னத்தை கர்த்தர் உன்னிடத்தில் கேட்கிறார்" என்று வினவிய பின்பு, நியாயஞ் செய்து இரக்கத்தைச் சிநேகித்து, உன் தேவனுக்கு முன்பாக மனத்தாழ்மையாய் நடப்பதை" என்று [மீகா 6 : 8] பதிலும் உரைத்தார். மோசே, மீகா மற்றும் இயேசு யாவரும் ஒன்று போலவே பதிலளித்தனர். எதைச் செய்யலாம் எதைச் செய்யக்கூடாது என்னும் அடிப்படை நியமங்களை மோசே மூலமாக தேவன் அருளினார். மீகாவும் மற்ற தீர்க்கதரிசிகளும் மோசே கற்பித்ததையே கற்பித்தனர். அவைகள் மாற்றப்படவில்லை. இயேசுவின் போதகங்கள் மோசேயின் கற்பனைகளைவிட எவ்வளவோ மேலானவைகள். மோசே ஜனங்களுக்கு என்ன செய்ய வேண்டும் என்று கற்பித்தார், இயேசுவோ எப்படியிருக்க வேண்டுமென்று கற்பிக்கிறார். ஒரு நாள் மலையொன்றின் மீதேறி, தேவன் கேட்பதென்னவென்று திரளான ஜனங்களுக்குப் போதித்தார். அவைகளை நாம் 'மலைப் பிரசங்கம்' என்று அழைக்கிறோம், இது அவர் செய்த பிரசங்கங்களில் மிகவும் முக்கியமானது. இன்பமான வாழ்க்கை நடத்துவதெப்படி என்று கூறினார்.

1. இயேசுவின் போதகங்கள் யாருடைய கற்பனைகளைவிட மேலானவைகள் ?

"யார் சந்தோஷமாயிருக்க முடியும்? ஆவியில் எளிமையுள்ளவர்கள் பாக்கியவான்கள்; பரலோக ராஜ்யம் அவர்களுடையது. துயரப்படுகிறவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் ஆறுதலடைவார்கள், சாந்தகுணமுள்ளவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் பூமியைச் சுதந்தரித்துக்கொள்வார்கள். நீதியின் மேல் பசிதாகமுள்ளவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் திருப்தியடைவார்கள். இரக்கமுள்ளவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் இரக்கம் பெறுவார்கள், இருதயத்தில் சுத்தமுள்ளவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் தேவனைத் தரிசிப்பார்கள். சமாதானம் பண்ணுகிறவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் தேவனுடைய புத்திரர் எனப்படுவார்கள். நீதியினிமித்தம் துன்பப்படுகிறவர்கள் பாக்கியவான்கள்; பரலோக ராஜ்யம் அவர்களுடையது' மத்தேயு 5 3-10.

2. சந்தோஷமான வாழ்க்கை நடத்துவது எப்படியென்று எங்கே கூறியிருக்கிறார்?

3. நீதியினிமித்தம் துன்பப்படுகிறவர்கள் எதைச் சுதந்தரித்துக் கொள்வார்கள்?

"என்னிமித்தம் உங்களை நிந்தித்து துன்பப்படுத்தி பலவித தீமையான மொழிகளையும் உங்கள் பேரில் பொய்யாய் சொல்வார்களானால் பாக்கியவான்களாயிருப்பீர்கள். சந்தோஷப்பட்டு களிகூறுங்கள், பரலோகத்தில் உங்கள் பலன் மிகுதியாயிருக்கும் உங்களுக்கு முன்னிருந்த தீர்க்கதரிசிகளையும் அப்படியே துன்பப் படுத்தினார்களே. மத்தேயு 5 : 10-12

சந்தோஷமானது வெறும் புன்சிரிப்பைக் காட்டிலும் மேலான ஒன்று. அது எல்லா சூழ்நிலைகளும் உங்களுக்கெதிராக நேரிடும் பொழுதும் உங்களிருதயத்திலிருந்து வரும் மகிழ்ச்சியின் கீதமாக இருக்கிறது. எவ்வித கஷ்டமுமில்லாமல் சந்தோஷத்தை அனுபவிக்கலாமென்று இயேசு வாக்குக் கொடுக்கவில்லை. தேவன் விரும்புவதைச் செய்யவேண்டுமென்றால் இந்த எட்டு அழகிய குணாசிலங்களை நாம் கைக்கொள்ளவேண்டும். நம் நண்பர்களிடத்திலும் அயலகத்தார்களிடத்திலும் பழகும்போது அவைகள் எவ்வளவு முக்கியம் என இயேசு காண்பிக்கிறார்.

"நீங்கள் பூமிக்கு உப்பாயிருக்கிறீர்கள்... நீங்கள் உலகத்துக்கு வெளிச்சமாயிருக்கிறீர்கள், இவ்விதமாய் மனுஷர் உங்கள் நற்கிரியைகளைக் கண்டு பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதாவை மகிமைப்படுத்தும்படி உங்கள் வெளிச்சம் அவர்களுக்கு முன்பாக பிரகாசிக்கக்கடவது." மத்தேயு 5 : 13-16

நாம் உப்பைப் போல வாழ்க்கைக்கு சாரம் கொடுக்கிறவர்களாகவும், தேவனிடத்திற்கு ஜனங்களை வழி நடத்துகிற ஒளியாகவும் இருக்க வேண்டும்.

மோசேயின் கட்டளைகளின் உண்மையான கருத்துக்கள் :

மோசேயின் கட்டளைகள் ஒரு மனிதனின் செயல்களை நியாயந்தீர்க்கும் பிரமாணங்களாக இருக்கின்றன, ஒவ்வொருவரும் தங்களைத் தாங்களே நியாயந்தீர்க்க இயேசு ஒரு பிரமாணத்தைக் கட்டளையிடுகிறார். ஒருவன் கட்டளைகளை மீறாமல் இருக்க மிகவும் ஜாக்கிரதையாயிருக்கக் கூடும், இருப்பினும் உள்ளத்திற்குள் பாவம் நிரம்பியிருக்கக்கூடும், பாவ

சிந்தனைகளும், பாவ உணர்ச்சியும், இச்சைகளும் பாவத்தைச் செய்யத் தூண்டுகின்றன. ஒரு தூய ஜீவியத்தைச் செய்ய வேண்டுமென்றால் முதலாவதாக இருதயத்தைச் சுத்திகரித்துக் கொள்ள வேண்டுமென்று இயேசு நமக்கு போதிக்கிறார், அனேக சன்மார்க்க மற்றும் மதச் சம்பந்தமான கேள்விகளுக்கும் அவர் பதிலளித்தார்,

4. இருதயத்தில் சுத்தமுள்ளவர்கள் ஏன் பாக்கியவான்கள் என்று அழைக்கப்படுகின்றனர்?

5. ஒருவன் கட்டளைகளை மீறாமல் ஜாக்கிரதையாக இருந்தாலும் அவனுடைய உள்ளம் எதனால் நிரம்பியிருக்கக்கூடும்?

கோபமும் கொலையும் ;

"கொலை செய்யாதிருப்பாயாக என்பதும், கொலை செய்கிறவன் நியாயத்தீர்ப்புக்கு ஏதுவாயிருப்பான் என்பதும், பூர்வத்தாருக்கு உரைக்கப்பட்டதென்று கேள்விப்பட்டிருக்கிறீர்கள். நான் உங்களுக்குச் சொல்லுகிறேன் : தன் சகோதரனை நியாயமில்லாமல் கோபித்துக் கொள்பவன் நியாயத் தீர்ப்புக்கு ஏதுவாயிருப்பான் ; தன் சகோதரனை வீணனென்று சொல்லுகிறவன் ஆலோசனைச் சங்கத் தீர்ப்புக்கு ஏதுவாயிருப்பான் ; மூடனே என்று சொல்லுகிறவன் எரி நரகத்துக்கு ஏதுவாயிருப்பான்" மத்தேயு 5 ; 21, 22.

கொலை செய்வதுதான் ஒரு மகா பெரிய பாவம் என்று மனிதர்கள் நினைக்கின்றனர். ஆனால் கொலை செய்வதற்கு முன்பு கோபமும் சபித்தலும் இருதயத்திலே ஆரம்பமாகிறது. அதையும் தேவன் கடுமையாகத் தண்டிப்பார் என்று இயேசு போதித்தார்.

விபச்சாரம் :

"விபச்சாரம் செய்யாதிருப்பாயாக என்பது பூர்வத்தார்க்கு உரைக்கப்பட்டதென்று கேள்விப்பட்டிருக்கிறீர்கள். நான் உங்களுக்குச் சொல்லுகிறேன் : ஒரு ஸ்திரீயை இச்சையோடு பார்க்கிற எவனும் தன் இருதயத்திலே அவளோடே விபச்சாரம் செய்தாயிற்று." மத்தேயு 5 ; 27, 28.

விவாகரத்து :

"தன் மனைவியைத் தள்ளிவிடுகிற எவனும், தள்ளுதற் சீட்டை அவளுக்குக் கொடுக்கக்கடவன் என்று உரைக்கப்பட்டது. உங்கள் இருதயக் கடினத்தினிமித்தம் உங்கள் மனைவிகளைத் தள்ளிவிடலாமென்று

மோசே உங்களுக்கு இடங்கொடுத்தார். ஆதிமுதலாய் அப்படியிருக்க வில்லை. ஆதலால் எவனாகிலும் தன் மனைவி வேசித்தனஞ் செய்ததி னிமித்தமேயன்றி அவளைத் தள்ளிவிட்டு வேறொருத்தியை விவாகம் பண்ணினால், அவன் விபச்சாரம் செய்தவனாயிருப்பான்; தள்ளிவிடப் பட்டவளை விவாகம் பண்ணுகிறவனும் விபச்சாரம் செய்கிறவனாயிருப் பான் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்." மத்தேயு 5 : 31; 19 : 8, 9.

6. தள்ளுதற் சீட்டைக் கொடுத்து மனைவியைத் தள்ளிவிடலாமென்று இயேசு கூறினாரா?

ஆணையிடுதல் :

"அன்றியும், பொய்யாணையிட்டால் உன் ஆணைகளைக் கர்த்தர் முன் னிலையாய்ச் செலுத்துவாயாக என்று பூர்வத்தாருக்கு உரைக்கப்பட்ட தென்று கேள்விப்பட்டிருக்கிறீர்கள். நான் உங்களுக்குச் சொல்லுகிறேன். பரிச்சேதம், சத்தியம் பண்ணவேண்டாம். அது அவருடைய சிங்கா சனம். பூமியின் பேரிலும் சத்தியம் பண்ணவேண்டாம். அது மகா ராஜாவினுடைய நகரம். உன் சிரசின் பேரிலும் சத்தியம் பண்ணவேண் டாம், அதின் ஒரு மயிரையாவது வெண்மையாக்கவும் கறுப்பாக்கவும் உன்னால் கூடாதே. உள்ளதை உள்ளதென்றும், இல்லதை இல்ல தென்றும் சொல்லுங்கள்; இதற்கு மிஞ்சியது தீமையினால் உண்டா யிருக்கும்." மத்தேயு 5; 33, 37.

பழி வாங்குதல் :

"கண்ணுக்குக் கண், பல்லுக்குப் பல் என்று உரைக்கப்பட்டதைக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்; தீமை யோடு எதிர்த்து நிற்க வேண்டாம்; ஒருவன் உன்னை வலது கன்னத்தில் அறைந்தால், அவனுக்கு மறு கன்னத்தையும் திருப்பிக்கொடு." மத்தேயு 5 : 38, 39

"உனக்கடுத்தவனை சிநேகித்து, உன் சத்துருவைப் பகைப்பாயாக என்று சொல்லப்பட்டதைக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். நான் உங்க ளுக்குச் சொல்லுகிறேன் : உங்கள் சத்துருக்களை சிநேகியுங்கள். உங்களை சபிக்கிறவர்களை ஆசிர்வதியுங்கள். உங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்மை செய்யுங்கள்; உங்களை நிந்திக்கிறவர்களுக் ாகவும் உங் ளை துன்பப்படுத்துகிறவர்களுக்காகவும் ஜெபம் பண்ணுங்கள், இப்படிச்

செய்வதினால் நீங்கள் பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதாவுக்குப் புத்திரராயிருப்பீர்கள்; அவர் தீயோர் மேலும், நல்லோர் மேலும் தமது சூரியனை உதிக்கப்பண்ணி, நீதியுள்ளவர் மேலும் அநீதியுள்ளவர் மேலும் மழையைப் பெய்யப்பண்ணுகிறார். ஆகையால் பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதா பூரண சற்குணராயிருக்கிறதுபோல், நீங்களும் பூரண சற்குணராயிருக்கக்கடவீர்கள்." மத்தேயு 5 : 43, 45, 48.

7. தம்முடைய சத்துருக்களை, எவ்வாறு இயேசு நடத்தவேண்டுமென்று கூறினார்?

தர்மஞ் செய்தல்;

"ஆகையால் நீ தர்மஞ்செய்யும்போது மனுஷரால் புகழப்படுவதற்கு மாயக்காரர் ஆலயங்களிலும், வீதிகளிலும் செய்வதுபோல, உனக்கு முன்பாகத் தாரை ஊதுவியாதே: அவர்கள் தங்கள் பலனை அடைந்து தீர்ந்ததென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்." மத்தேயு 6 : 2.

(மனுஷர் புகழும்பொழுது உண்டாகும் திருப்தியே அவர்களுக்குக் கிடைத்த பலன் தேவனிடமிருந்து பலனைப் பெற்றுக்கொள்ள மாட்டார்கள்.)

உபவாசம் செய்தல்:

"நீங்கள் உபவாசிக்கும்போது" மாயக்காரரைப்போல் முகவாடலாய் இராதேயுங்கள்: அவர்கள் உபவாசிக்கிறதை மனுஷர் காணும் பொருட்டாக தங்கள் முகங்களை வாடப்பண்ணுகிறார்கள்; அவர்கள் தங்கள் பலனை அடைந்து தீர்ந்ததென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். நீயோ உபவாசிக்கும்போது அந்த உபவாசம் மனுஷர்களுக்குக் காணப்படாமல் அந்தரங்கத்தில் இருக்கிற உன் பிதாவுக்கே காணப்படும்படியாக உன் தலைக்கு எண்ணெய் பூசி, உன் முகத்தைக் கழுவு. அப்பொழுது, அந்தரங்கத்தில் பார்க்கிற உன் பிதா உனக்கு வெளியரங்கமாய் பலனளிப்பார்." மத்தேயு 6 : 16-18

8. நம்முடைய உபவாசம் யார் காணும்படியாக இருக்க வேண்டும்?

மற்றவர்களுக்குத் தீர்ப்பளித்தல்:

"நீங்கள் குற்றவாளிகளென்று தீர்க்கப்படாதபடிக்கு மற்ற

வர்களை குற்றவாளிகளென்று தீர்க்காதிருங்கள். ஏனெனில் நீங்கள் மற்றவர்களைத் தீர்க்கிற தீர்ப்பின்படியே நீங்களும் தீர்க்கப்படுவீர்கள்; நீங்கள் மற்றவர்களுக்கு அளக்கிற அளவின்படியே உங்களுக்கும் அளக்கப்படும். நீ உன் கண்ணிலிருக்கிற உத்திரத்தை உணராமல், உன் சகோதரன் கண்ணிலிருக்கிற துரும்பைப் பார்க்கிறதென்ன? இதோ உன் கண்களில் உத்திரம் இருக்கையில் உன் சகோதரனை நோக்கி; நான் உன் கண்ணிலிருக்கும் துரும்பை எடுத்துப் போடட்டும் என்று நீ சொல்வதெப்படி? மாயக்காரனே முன்பு உன் கண்ணிலிருக்கிற துரும்பை எடுத்துப்போட வகை பார்ப்பாய். மனுஷர் உங்களுக்கு எவைகளைச் செய்ய விரும்புகிறீர்களோ அவைகளை நீங்களும் அவர்களுக்குச் செய்யுங்கள்." மத்தேயு 7 ; 1-5, 12.

நம்மில் இருக்கும் பெருங் குற்றங்களை நாம் காண்பது அரிது. ஆனால் மற்றவர்களிடத்திலிருக்கும் சிறு குற்றங்களைக் கண்டு பிடிப்பது சுலபம்.

அன்பு கூறுதல் ;

"இயேசுவின் ராஜ்யத்தினுடைய பிரதான பிரமாணம் அன்பாக இருக்கின்றது தேவனில் அன்பு கூறுவதுபோல் ஒருவரில் ஒருவர் அன்பு கூறுவது. நியாய சாஸ்திரி ஒருவன் அவரைச் சோதிக்கும்படி, போதகரே நியாயப்பிரமாணத்திலே எந்தக் கற்பனை பிரதானமானது என்று கேட்டான். இயேசு அவனை நோக்கி: உன் தேவனுகிய கர்த்தரிடத்தில் உன் முழு இருதயத்தோடும் உன் முழு ஆத்மாவோடும் உன் முழு மனதோடும் அன்பு கூறுவாயாக; இது முதலாம் பிரதான கற்பனை. இதற்கு ஒப்பாயிருக்கிற இரண்டாம் கற்பனை என்னவென்றால், உன்னிடத்தில் நீ அன்பு கூறுவதுபோல பிறனிடத்திலும் அன்பு கூறுவாயாக என்பதே. இவ்விரண்டு கற்பனைகளிலும் நியாயப்பிரமாணம் முழுமையும் தீர்க்கதரிசனங்களும் அடங்கியிருக்கிறது என்றார்" மத்தேயு 22-35-40

"நீங்கள் என்னை ஆண்டவரே, ஆண்டவரே என்று அழைத்தும், நான் சொல்லுகிறபடி நீங்கள் ஏன் செய்கிறதில்லை? என்னிடம் வந்து, என் வார்த்தைகளைக் கேட்டு, அவற்றின்படி செய்கிற ஒவ்வொருவனும் யாருக்கு ஒப்பாயிருப்பான் என்பதை உங்களுக்குக் காண்பிக்கிறேன். ஆழமாகத் தோண்டி, கற்பாறையின்மேல் அடித்தளமிட்டு வீடு கட்டின மனிதனுக்கு அவன் ஒப்பாயிருப்பான்; வெள்ளம் வந்தபோது, நீரோட்டம் அந்த வீட்டின்மேல் மோதியும் அதை அசைக்க இயலவில்லை; ஏனெனில் அது நன்றாய் கட்டப்பட்டிருந்தது. என் வார்த்தைகளைக் கேட்டும் அவற்றின்படி செய்யாதவனோ அடித்தளமில்லாமல் மண்ணின்மேல் வீடு கட்டினவனுக்கு ஒப்பாயிருப்பான். நீரோட்டம்

அதின் மேல் மோதினவுடனே அது விழுந்தது: அந்த வீடு முற்றிலும் அழிந்தது என்றார்,'' லூக்கா 6 : 46 - 49.

நம்மிடமிருக்கும் ஒரு துக்ககரமான விஷயம் என்னவென்றால் தேவன் விரும்புவதை ஒருவராவது தாமாகவே செய்ய முடியாதவர்களாக இருக்கின்றோம்; நாம் அவ்விதமாக உண்டாக்கப்படவில்லை. நம் இருதயங்களில் பாவம் குடிகொண்டிருக்கின்றது, சுயநலமும் கீழ்ப்படியாமையும் ஜீவிக்க வேண்டிய பிரகாரம் ஜீவிக்க முடியாமல் செய்துவிடுகின்றன. நாம் என்ன செய்ய முடியும்? தாவீது ராஜா தேவன் எதிர்பார்ப்பதை அவராலும் மற்றும் ஒருவராலும் செய்ய முடியாது என்று உணர்ந்தார்; அவர் தன்னுடைய இயலாமையை இவ்வாறு எழுதினார்.

"தேவனைத் தேடுகிற உணர்வுள்ளவன் உண்டோ என்று பார்க்க, தேவன் பரலோகத்திலிருந்து மனுபுத்திரரைக் கண்ணோக்கினார். அவர்கள் எல்லோரும் வழி விலகி ஏகமாய் கெட்டுப் போனார்கள்: நன்மை செய்கிறவன் இல்லை. ஒருவனாகிலும் இல்லை." சங்கீதம் 53 : 2, 8

9. தேவன் விரும்புவதை நம் சொந்த பலத்தால் செய்ய முடியுமா?

"ஒரு மனிதன் எவ்வாறு தேவனிடமிருந்து உதவியைப் பெற்றுக் கொள்ளமுடியும் என்று ஏசாயா தீர்க்கதரிசி கூறுகிறார்; துன்மார்க்கன் தன் வழியையும் அக்கிரமக்காரன் தன் நினைவுகளையும் விட்டு, கர்த்தரிடத்தில் திரும்பக்கடவன்; அவர் அவன்மேல் மனதுருகுவார்; நம்முடைய தேவனிடத்திற்கே திரும்பக்கடவன். அவர் மன்னிக்கிறதற்கு தயை பெருத்திருக்கிறார்." ஏசாயா 55 ; 7

"எசேக்கியல் என்னும் இன்னொரு தீர்க்கதரிசி இதை எவ்வாறு தேவன் செய்கிறார் என்று கூறுகிறார்: நான் அவர்களுக்கு ஏக இருதயத்தைத் தந்து, அவர்கள் உள்ளத்தில் புதிய ஆவியைக் கொடுத்து கல்லான இருதயத்தை அவர்கள் மாம்சத்திலிருந்து எடுத்துப்போட்டு சதையான இருதயத்தை அவர்களுக்கு அருளுவேன்," எசேக்கியல் 11 ; 19.

இயேசுவோ கீழ்க்காணுமாறு கூறி இந்தச் சத்தியத்தை இன்னும் தெளிவாக்குகிறார். "நீங்கள் மறுபடியும் பிறக்க வேண்டும்." யோவான் 3 : 7

இயேசு நமக்குக் காண்பிப்பதையெல்லாம் நாம் செய்ய விரும்பும் வண்ணமாக தேவன் நம்மை மாற்றுவார். அவருடைய பரிசுத்தாவியானவரும் நமக்கு உதவி செய்வார். அதுவே வாழ்க்கையின் ஒரு புது

ஆரம்பம் ஆகும். நாம் தேவனுடைய பிள்ளைகளாக மாறி புதிய சுபாவத்தைப் பெற்றுக் கொள்கிறோம். இதைத்தான் இயேசு "மறுபிறப்பு" என்று அழைத்தார்.

**10. இயேசு எதை மறுபிறப்பு என்று அழைக்கிறார்?**

ஆயிரக்கணக்கான மக்கள் இதை அனுபவித்து வருகின்றனர். அவர்கள் ஒரு புதிய வாழ்க்கையை இயேசுவைப் பின்பற்றுவதின் மூலம் கண்டடைகின்றனர். அவர்கள் யாவரும் நித்திய பேரின்ப விண்ணுலக வாழ்க்கைக்காகக் காத்துக் கொண்டிருக்கின்றனர். நீங்களும் அவர்களில் ஒருவராக இருக்கின்றீர்களா?

பாடம் எட்டு

## ஒரு தகப்பன் தன் மகனை மன்னித்தல்

### இயேசு ஒரு கதை சொல்லுதல்

இயேசு அடிக்கடி உவமைகள் என்னும் சிறு சிறு கதைகள் கூறி அவைகளின் மூலம் ஆவிக்குரிய சத்தியங்களைப் போதித்தார். இது அவைகளில் ஒன்று:

மேலும் அவர். "ஒரு மனிதனுக்கு மைந்தர் இருவர் இருந்தனர். அவர்களுள் இளையவன் தகப்பனிடம் சென்று அப்பா, சொத்தில் எனக்குச் சேரவேண்டிய பாகத்தை எனக்குக் கொடுத்துவிட வேண்டும்.' என்று கேட்டான். அவனும் தன் சொத்தை அவர்களுக்குப் பங்கிட்டுப் பங்கிட்டுக் கொடுத்தான். சில நாட்களுக்குள்ளாக இளைய மகன் தனக்குரிய எல்லாவற்றையும் விற்றுப் பணத்தைத் திரட்டிக்கொண்டு, அன்னிய நாடு ஒன்றுக்குப்போய், அங்கே ஒழுக்கக்கேடான வாழ்க்கை நடத்தித் தன் சொத்தைப் பாழாக்கலானான். எல்லாவற்றையும் செலவு செய்த பின்பு, அந்த நாட்டில் கொடிய பஞ்சம் வந்தது. அவன் வறுமையால் வாடத் தொடங்கினபோது, அந்த நாட்டினன் ஒருவனை அண்டிப் பிழைக்கப்போனான். அவன் தன் வயல்களில் பன்றி மேய்க்க அவனை அனுப்பினான். பன்றி தின்னும் தவிட்டையாவது தின்று தன் வயிற்றை நிரப்பலாமென்று ஆவல் கொண்டான். ஆனால் அவனுக்குக் கொடுப்பார் எவருமில்லை. அவனுக்குப் புத்தி தெளிந்தபோது அவன் "என் தகப்பனார் வீட்டில் எத்தனையோ கூலியாட்களுக்குத் தேவைக்கு மேலாகவே சாப்பாடு கிடைக்கிறது. நானோ இங்கே பசியால் சாகிறேன். நான் எழுந்து என் தகப்பனாரிடம் போய், அப்பா, விண்ணுலகத்திற்கு

விரோதமாகவும் உமக்கு விரோதமாகவும் பாவம் செய்தேன். இனி நான் உம்முடைய மகன் என்று அழைக்கப்படுவதற்குத் தகுதியற்றவன். உம்முடைய கூலியாட்களில் ஒருவனாக வைத்துக்கொள்ளும் என்பேன்" என்று சொல்லிக்கொண்டே எழுந்து தன் தகப்பனிடம் வந்தான். அவன் தொலைவில் வரும்போதே தகப்பன் அவனைக்கண்டு மனவுருக்கங் கொண்டு, ஓடி அவனைக் கட்டித் தழுவி முத்தமிட்டான். மகனோ தகப்பனிடம் அப்பா, விண்ணுலகத்திற்கு விரோதமாகவும். உமக்கு விரோதமாகவும் பாவம் செய்தேன். இனி நான் உம்முடைய மகனென்று அழைக்கப்படுவதற்குத் தகுதியற்றவன் என்று சொன்னான். ஆனால் தகப்பனோ தன் வேலைக்காரரைக் கூப்பிட்டு, நீங்கள் முதல்தரமான உடையாகக்கொண்டு வந்து இவனுக்கு உடுத்தி, கைக்கு மோதிரமும் காலுக்கு மிதியடியும் போடுங்கள். கொழுத்த கன்றைக் கொண்டுவந்து அடித்துச் சமையுங்கள். நாம் உண்டு களிப்போம். இந்த என் மகன் செத்துப்போனான். இப்போது உயிரோடு வந்திருக்கிறான். காணமற் போயிருந்தான், இப்போது கிடைத்துவிட்டான்" என்றான். அவர்கள் அப்படியே செய்து களிப்புடன் கொண்டாட்டங்களைத் தொடங்கினார்கள்,

1. இளைய குமாரன் தன் தகப்பனைப் பார்த்து என்ன கேட்டான்?
2. அவனது பணம் எல்லாம் தீர்ந்த பின்பு அவனுக்கு என்ன வேலை கிடைத்தது?
3. அவன் எந்த எண்ணத்தோடு வீடு திரும்பினான்?

" அவனுடைய மூத்த மகன் அப்போது வயலிலிருந்தான்; அவன் திரும்பி வீட்டுக்குப் பக்கத்தில் வருகையில் ஆடல் பாடல்களைக் கேட்டு வேலைக்காரரில் ஒருவனை அழைத்து இது என்ன என்று விசாரித்தான். அதற்கு அவன், உன்னுடைய தம்பி வந்துவிட்டார். அவரைச் சுகத்துடனே திரும்பிப் பெற்றுக்கொண்டதால் உம்முடைய தகப்பனார் கொழுத்த கன்றை அடித்திருக்கிறார் என்றான். அப்பொழுது அவன் கோபமடைந்து உள்ளே போக மறுத்துவிட்டான். தகப்பன் வெளியே வந்து அவனை வருந்தியழைத்தான். அவனோ தகப்பனிடம், இத்தனை ஆண்டுகளாக நான் உமக்கு உழைத்து வருகிறேன். ஒரு போதும் உமது கட்டளையை மீறினதுமில்லை. அப்படியிருந்தும் என் நண்பரோடு நான் களிப்பதற்கு நீர் ஒருபோதும் ஒரு ஆட்டுக் குட்டியைக் கூட எனக்கென்று கொடுத்ததில்லை உம்முடைய மகனாகிய இவன் வேசிகளிடம் உம்முடைய சொத்தை

அழித்துவிட்டுத் திரும்பி வந்தான். வந்தவுடனே இவனுக்காகக் கொழுத்த கன்றை அடிக்கிறீரே என்றான். அதற்கு அவன், ''மகனே நீ எப்போதும் என்னுடனிருக்கிறாய். என்னுடையவையெல்லாம் உன்னுடையவையே. இப்போது நாம் இப்படிக் களிகூர்ந்து மகிழ்வது நியாயம். ஏனென்றால் உன் தம்பியாகிய இவன் செத்துப் போனான், இப்போது உயிரோடு வந்திருக்கிறான்; காணமற்போயிருந்தான், இப்போது கிடைத்துவிட்டான் என்று சொன்னான் என்றார்.'' லூக்கா 15 : 11-32.

## கதையிலிருந்து கற்றுக்கொள்ளும் பாடங்கள்

ஆஸ்திகளை வைத்துப் போவதில் இரண்டு விதமுண்டு. ஒன்று உயில் எழுதி வைப்பது. இன்னொன்று சொந்தக்காரர் உயிரோடிருக்கும் பொழுதே அவைகளைத் தன் வாரிசுகளுக்குப் பரிசாக வழங்குவது. இளைய குமாரன் வீட்டை விட்டுச் சென்று தன் வாழ்க்கையைத் தன் இஷ்டம் போல் நடத்த விரும்பினான். தனக்கு விருப்பமானவர்களை நண்பர்களாகத் தெரிந்துகொள்ள விரும்பினான். அவனுடைய தகப்பனுருடைய அல்லது சகோதரனுடைய சொல்படி கேட்டு நடக்க அவன் விரும்பவில்லை. ஆகவே அவனுடைய தகப்பன் அவருடைய ஆஸ்தியைப் பங்கிட்டுக் கொடுத்தார். அவன் வீட்டை விட்டுச் சென்றான்.

பணம் அவன் கையில் இருக்கும்வரை ''நண்பர்கள்'' அவனோடு இருந்தனர். பணம் அவனை விட்டுச் சென்றது போலவே நண்பர்களும் அவனை விட்டுச் சென்றனர். கடைசியாகப் பட்டினி கிடந்து வேதனைப் பட்டு தான் மேய்க்கின்ற பன்றிகளைவிட மோசமாக இவ்வளவு பெரிய மதியீனனாக மாறிவிட்டேனே என்று உணர்ந்தான். தன் பாவங்களுக்காக மனஸ்தாபப்பட்டு, அவைகளை அறிக்கைசெய்து மன்னிப்பைக் கேட்டுக் கொண்டு வீட்டுக்குத் திரும்பினான். அவனுடைய தகப்பனார் அவனுக்கு ஒரு வேலையாவது கொடுப்பார் என்று நம்பினான்.

ஆனால் என்ன ஆச்சரியம்! அவனுடைய தகப்பனார் அவனை வீட்டிற்கு வரவேற்று குடும்பத்தில் ஒருவனாக திரும்ப அவனை ஏற்றுகொண்டார். இப்படிப்பட்ட நிலைக்கு அவன் தகுதியற்றவன். இருப்பினும் அவனுடைய பாவங்களுக்கு மாறாக அவனுடைய தகப்பனார் அவனை இன்னும் நேசிக்கிறார்.

4. எதுவரையும் ''நண்பர்கள்'' அவனோடு இருந்தனர்?

இந்த உவமையில் தகப்பனுர் தம்முடைய பரலோகப் பிதாவாகிய தேவனுக்கு அடையாளமாக இருக்கிருர். குமாரர்கள் காணுமற்போன நிலையில் இருக்கும் இரண்டு கூட்ட ஜனங்களைக் குறிப்பிடுகின்றனர் ஒரு பாவி தன் பாவங்களுக்காகவும் தவறுகளுக்காகவும் மனஸ்தாபப்பட்டு பாவ மன்னிப்புக்காக தேவனிடம் திரும்பி வருபவனுக்கு ஒப்பாயிருக்கிருன். இளையகுமாரன்.

5. தகப்பனுர் யாருக்கு அடையாளமாக இருக்கிருர்?

6. இளையகுமாரன் யாருக்கு அடையாளமாக இருக்கின்றுன்?

மூத்த குமாரன் தான் எவ்வளவு நல்லவன் என்றும், தகப்பனேடேயே வேலை செய்துகொண்டிருக்கிறேன் என்றும் பெருமைப் பட்டுக்கொண்டிருந்தான். தன் தம்பியைக் குறித்து மிகவும் வெட்கப்பட்டுக்கொண்டிருந்தான். அவனுடைய மரியாதையற்ற வார்த்தைகள் மெய்யான அன்பு அவனிடத்திலலை என்று காட்டுகிறது.

அவனுடைய தம்பி தூர தேசத்திற்கு சென்றவண்ணமே இவனுடைய இருதயம் வீட்டைவிட்டு தூரத்திரிந்து கொண்டிருந்தது. தங்களுடைய நற்கிரியைகளைக் குறித்து பெருமைப் பட்டுக்கொண்டு தாங்களும் பாவிகள் அவர்களுக்கும் பாவமன்னிப்பு தேவை என்பதை உணராதவர்களுக்கு அவன் அடையாளமாக இருக்கிருன். அவனுடைய சகோதரன் தூர தேசத்தில் திரிந்து கொண்டிருந்ததை விட இவனுடைய பெருமை, கண்டனம் பண்ணுதல் ஒருவரையும் மன்னிக்க முடியாத சுபாவம என்பன அதைவிட மோசமான பாவங்களாய் இருக்கக்கூடும்.

நாம் எல்லோருமே நம்முடைய பரலோகப் பிதாவிற்குக் கீழ்ப்படியாமல் தவறுகளைச் செய்கின்றேும். பரலோகமாகிய அந்த அற்புதமான வீட்டில் ஒரு இடத்தைப் பெற்றுக்கொள்ள நாம் தகுதியுள்ளவர்கள் அல்ல. ஆனுல் அவரோ, நம்முடைய பாவங்களைவிட்டு விலகி அவரிடத்தில் வந்து பாவ மன்னிப்பைப் பெற்றுக்கொள்ளும்படியாக நம்மை அழைக்கிருர்.

"பாவத்தின் சம்பளம் மரணம். தேவனுடைய கிருபை வரமோ நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுல் உண்டான நித்திய ஜீவன்." ரோமர் 6 : 23.

## மன்னிப்பு என்றால் என்ன?

நமக்கு துன்பம் செய்தவர்களை அல்லது நமக்கு விரோதமாக தவறு செய்தவர்களைத் தண்டிக்க நமக்கிருக்கிற உரிமையை நாம் விட்டுக் கொடுப்பதே மன்னிப்பாகும். குற்றவாளி தண்டனையைப் பெற்றுக் கொள்ளத் தகுதியுடையவன். அவன் மனஸ்தாபப்பட்டு மன்னிப்பைக் கேட்பான் என்றால் அவனைத் தண்டிக்கவோ அவனை மன்னிக்கவோ வேண்டியவர்களாக இருக்கின்றோம். தகப்பன் தன் இளைய குமாரனைத் தண்டிக்க மறுத்து அவனுடைய ஸ்தானத்தைத் திரும்ப அவனுக்குக் கொடுத்து குடும்பத்தில் அவனைக் கௌரவப்படுத்தினார். மூத்த குமாரனோ முறுமுறுப்பையும் கண்டனம் செய்வதையும் தெரிந்துகொண்டான். ஜனங்கள் தங்கள் பாவங்களை விட்டு மனந்திரும்பி நீதியாய் ஜீவிக்க ஆரம்பிப்பதால் தேவனை திருப்திப்படுத்தலாம்.

7. மனஸ்தாபப்பட்டு திரும்பி வந்த இளைய குமாரனை தகப்பனார் தண்டித்தாரா அல்லது ஏற்றுக்கொண்டாரா?

8. தன் சகோதரன் திரும்பி வந்ததினால் மூத்த சகோதரன் சந்தோஷப் பட்டானா?

## மன்னிப்பு யாருக்கு அவசியம்?

"ஒரு பாவமும் செய்யாமல், நன்மையே செய்யத்தக்க நீதிமான் பூமியிலில்லை. பிரசங்கி 7 ; 20. என் இருதயத்தைச் சுத்தமாக்கினேன். என் பாவமறத் துப்புரவானேன் என்று சொல்லத்தக்கவன் யார்? நீதி, 20 ; 9, நன்மை செய்ய வேண்டுமென்கிற விருப்பம் என்னிடத்திலிருக்கிறது, நன்மை செய்வதோ என்னிடத்திலில்லை, ரோமர் 7 ; 18 நியாயப்பிரமாணம் செய்யக் கூடாததை தேவனே செய்யும்படிக்கு தம்முடைய குமாரனைப் பாவ மாம்சத்தின் சாயலாகவும், பாவத்தைப் போக்கும் பலியாகவும் அனுப்பி மாம்சத்திலே பாவத்தை ஆக்கினைக்குள்ளாகத் தீர்த்தார்," ரோமர் 8 ; 3

9, ஒரு பாவமும் செய்யாத நீதிமான் பூமியில் உண்டா?

இயற்கையாகவே நாம் பாவம் செய்யும் சுபாவத்தை உடையவர்களாக இருக்கின்றோம், ஏனெனில் நாம் பிறக்கும்போதே அப்படிப்பட்ட பெலவீனத்துடன் பிறந்தோம், அதை நாம் ஒத்துக்கொண்டு தேவனிடம் அறிக்கை செய்யாமல் வேறெந்த விதமாகவும் மேற்கொள்ள முடியாது,

## நாம் மன்னிக்க வேண்டும்

தேவன் நம்முடைய பாவங்களை நமக்கு மன்னிக்க வேண்டுமென்றால் நாமும் நமக்கு விரோதமாக குற்றம் செய்கிறவர்களுக்கு மன்னிக்க வேண்டுமென்று இயேசு போதித்தார். கோபம் ஒரு பாவமாகவும் மற்றெல்லாப் பாவங்களின் வேராகவும் இருக்கின்றது. அதுவே கசப்பு, கண்டனம், பகை, சண்டை, கொலை முதலானவைகளுக்குக் காரணமாக இருக்கின்றது. நம்முடைய பாவங்களைக் கெட்டியாக நாம் பிடித்துக்கொண்டிருக்கும் வரை நமக்கு அவைகளிலிருந்து பாவ மன்னிப்பு கிடையாது. தேவன் அவைகளை நம்மிடத்திலிருந்து எடுத்துப் போடும்படியாக அவைகளை நாம் விட்டுவிட வேண்டும்.

"இயேசு உரைத்தார்: மனுஷருடைய தப்பிதங்களை நீங்கள் அவர்களுக்கு மன்னியாதிருந்தால், உங்கள் பிதா உங்கள் தப்பிதங்களை மன்னியாதிருப்பார்." மத்தேயு 6 : 15

10. நம்முடைய பாவங்களை மன்னிக்கப்படத்தக்கதாக நாம் மற்றவர்களுக்கு என்ன செய்ய வேண்டும்?

## இயேசு பாவிகளை மன்னிக்கிறார்

இரண்டு காரணங்களுக்காக இயேசு உலகத்திற்கு வந்தார்:

1. தேவனைப் பற்றியும் அவருடைய அன்பைப் பற்றியும் நமக்குப் போதிக்கவும்

2. நமக்கு பாவமன்னிப்பை அருளும்படியாக தம்முடைய பாவங்களை நம்மேல் சுமந்துகொண்டு நம்முடைய ஸ்தானத்தில் மரிக்கவும்.

இயேசு எல்லா பாவிகளுக்காகவும் மரிக்க ஆயத்தமாயிருந்தபடியால். தங்கள் பாவங்களுக்கு பாவமன்னிப்பைத் தேடி வந்தவர்களுக்கு மன்னிப்பை அருளும் அதிகாரத்தையுடையவராக இருந்தார். அநேக பாவிகளை மன்னித்து அவர்களுடைய வாழ்க்கையை முற்றிலும் மாற்றியுள்ளார், அவர்களில் ஒரு பாவியாகிய ஸ்திரீ ஒரு வேளை அவர் போதிப்பதைக் கேட்டுக் கொண்டிருக்கக் கூடும். அவள் நன்றியைத் தெரிவிக்க விரும்பினாள், இயேசுவையும் அவருடைய சீஷர்களையும் சீமோன் விருந்திற்கு அழைத்திருந்தான். அந்த வீட்டிற்குள் நுழைந்தாள். இயேசுவின் பாதத்தினருகே நின்று பாவங்களுக்காக மனந்திரும்பி கண்ணீர் விட்டு அழுதாள். பாவியாகிய ஸ்திரீ இயேசுவைத் தொட்டும் அவர் அதை அனுமதித்ததைக்கண்டு சீமோன் அதிர்ச்சியடைந்தான். இயேசு அவனைப்பார்த்துக் கூறினார்:

"அப்பொழுது அவர், 'ஒருவனிடம் இரண்டுபேர் கடன்பட்டிருந்தனர். ஒருவன் ஐநூறு வெள்ளிப்பணமும், மற்றவன் ஐம்பது வெள்ளிக்காசும் கொடுக்கவேண்டியதாயிருந்தது. கடனைத் தீர்க்க அவர்களால் முடியாதிருந்தபோது, அவன் இருவரையும் மன்னித்துவிட்டான். அவர்களுள் எவன் மிகுந்த அன்புடையவனாயிருப்பான்? அதைச் சொல்' என்றார். அதற்குச் சீமோன்: எவனுக்கு அதிகமாக மன்னித்துவிட்டானோ அவனே என்று நினைக்கிறேன்" என்றார். அவர் அவனிடம் சரியாகத் தீர்ப்பளித்தாய் என்று கூறி, அந்த பெண்ணின் பக்கமாய்த் திரும்பி சீமோனிடம் 'இந்தப் பெண்ணைப் பார்த்தாயா? உன் வீட்டிற்குள் வந்தேன், நீ என் கால்களுக்குத் தண்ணீர் தரவில்லை, இவளோ தன் கண்ணீரினால் என் பாதங்களை நனைத்துக் கூந்தலினால் அவற்றைத் துடைத்தாள். நீ எனக்கு முத்தம் கொடுக்கவில்லை, இவளோ நான் உள்ளே வந்ததிலிருந்து என் பாதங்களை ஓயாமல் முத்தமிட்டுக்கொண்டிருக்கிறாள். நீ என் தலைக்கு எண்ணெய் பூசவில்லை, இவளோ என் பாதங்களில் பரிமள தைலம் பூசினாள். ஆகையால் உனக்குச் சொல்லுகிறேன்; இவள் செய்த பல பாவங்கள் இவளுக்கு மன்னிக்கப்பட்டுள்ளன. இவள் காட்டிய மிகுந்த அன்பிலிருந்து இது தெரிகிறது. எவனுக்கு சிறிதளவு மன்னிக்கப்படுகிறதோ அவன் சிறிதளவு அன்பு காட்டுவான்" என்று சொல்லி அவளைப் பார்த்து, "உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டன" என்றார். அப்பொழுது அவரோடுகூடச் சாப்பிட்டவர்கள், இவர் யார்? பாவங்களையும் மன்னிக்கிறாரே! என்று தங்களுக்குள்ளே சொல்லிக்கொள்ளலானார்கள். அவர் அந்தப் பெண்ணிடம், உன் விசுவாசம் நீ மீட்படையும்படி செய்திருக்கிறது; நீ சமாதானத்தோடு போ என்று சொன்னார். லூக்கா 7 : 41-50.

அவளுக்கு மன்னிப்பையளித்தபொழுது அந்த ஸ்திரீ எவ்வளவு மகிழ்ந்தாள். பரிசேயர்களும் அவருடைய நண்பர்களும் அதே மகிழ்ச்சியைப் பெற்றுக்கொண்டிருந்திருக்க முடியும். ஆனால் அவர்கள் பாவிகள் என்பதை ஒத்துக்கொள்ள விரும்பவில்லை. தங்களுடைய நற்கிரியைகளைக் குறித்தும் தங்களைக் குறித்தும் பெருமையாக எண்ணிக்கொண்டிருந்தனர்.

"பாவங்களை மன்னிக்கிற இவர் யார்" என்று பரிசேயர் கேள்வி கேட்டனர். யார் பாவங்களை மன்னிக்க முடியும். தேவ குமாரனாகிய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து அவரண்டை வருகிற யாவரையும் இன்னும் மன்னிக்கிறார். நாம் ஜெபத்தில் அவரது பாதத்தண்டை சேர்ந்து, நாம் பாவிகள் என்றும், நம்முடைய பாவங்களுக்காக நாம் துக்கப்படு

என்றும் அவைகளை வீட்டு விலக விரும்புகிறேம் என்றும் அறிக்கையிடுவோமென்றுல் நம்முடைய இருதயங்களில் '' உன் பாவம் உனக்கு மன்னிக்கப்பட்டது. உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது. சமாதானத்தோடே போ '' என்று அவர் கூறும் சத்தம் கேட்கும். இயேசுவின் மன்னிப்பு, சந்தோஷம், சமாதானம் புதிய ஜீவனை நமக்குக் கொடுக்கிறது,

இல்லையென்றுல் பரிசேயர்களைப் போலவே நாமும் பாவிகள் அல்ல என்று மாய்மாலம் செய்யக்கூடும், அப்படியிருக்கும்வரை நாம் பாவ மன்னிப்பைப் பெற்றுக்கொள்வது இயலாது, நாம் அவைகளை இயேசு விடம் அறிக்கையிட்டு அவரிடம் பாவம் மன்னிக்கப்படக் கேட்கவேண்டும், உங்கள் பாவங்கள் மன்னிக்கப்பட்டிருந்தால்தான் நீங்கள் நித்திய ஜீவனைப் பெற்றுக்கொள்ள முடியும்,

11, நித்திய ஜீவனை எப்படிப் பெற்றுக்கொள்ள முடியும்?

இந்த வசனத்தை மனப்பாடம் செய்க:

'' தகப்பனே, நான் தேவனுக்கு விரோதமாகப் பாவஞ் செய்தேன் இனி நான் உம்முடைய மகன் என்று அழைக்கப்படுவதற்குத் தகுதி யற்றவன்,''

இளைய குமாரனுடைய வார்த்தைகளை இப்பொழுது உங்களுடைய ஜெபமாக மாற்றிக் கொள்ளலாம், நீங்கள் என்ன செய்திருந்த போதிலும் பரவாயில்லை, தேவன் உங்களை மன்னித்து நம்முடைய வீட்டில் வரவேற்றுக் கொள்கிறுர், ஏனெனில் அவர் உங்களை நேசிக்கிறுர்.

பாடம் ஒன்பது

## இயேசுவின் நியாயம் விசாரிக்கப்படுதலும் சிலுவையிலறையப்படுதலும்

இயேசுவின் பிரசங்கங்கள் பிரதான மதத்தலைவர்களின் பாவங் களுக்கு எதிராக இருந்தபடியால் அவர்கள் அவரை வெறுத்தனர். திரளான ஜனக்கூட்டம் அவரைப் பின்செல்லுகிறதைக் கண்டு பொருமைப் பட்டனர். அவர் ஒரு புரட்சிக்காரராக இருந்தார் என்று குற்றம் சாட்டி கைசெய்து, பின்பு அவரைக் கொலை செய்யும்படியாகத் தீர்மானித்தனர். ஆகிலும் பகிரங்கமாக அவரைப்பிடித்தால் ஜனங்கள் அவருக்கு ஆதரவாக இருப்பார்கள் என்று பார்த்தனர். ஆகவே இரவிலே அவரைக் காட்டிக் கொடுக்கும்படியாக யூதாஸ்காரியோத்து என்னும் அவருடைய சீஷர்களில் ஒருவனுக்கு லஞ்சம் கொடுத்தனர். யூதாஸ்காரியோத்து அவரைக்

காட்டிக் கொடுப்பான் என்பதை அவர் முன்னமே அறிந்திருந்தார். அவர் அதிலிருந்து தப்பியிருக்கக்கூடும். ஆனால் தம்முடைய ஸ்தானத்தில் மரிக்கவே அவர் இவ்வுலகிற்கு வந்திருந்தார். இதைத் தம்முடைய சீஷர்களுக்கு கூறியிருந்தார்.

1. மதத் தலைவர்கள் பகிரங்கமாக அவரைப் பிடிக்க ஏன் பயப்பட்டார்கள்?

2. யாருடைய ஸ்தானத்தில் மரிக்கும்படியாக இயேசு இவ்வுலகிற்கு வந்தார்?

"இரண்டு நாளைக்குப் பின்பு பஸ்கா பண்டிகை வருமென்று அறிவீர்கள். அப்பொழுது மனுஷ குமாரன் சிலுவையிலறையப்படுவதற்கு ஒப்புக்கொடுக்கப்படுவார் என்றார்." மத்தேயு 26 : 2.

பஸ்கா பண்டிகை

பஸ்கா பண்டிகை தேவன் தம்முடைய ஜனங்களை அடிமைத்தனத்திலிருந்து மீட்டுக்கொண்டதை நினைவுகூர்ந்து கொண்டாடும் ஒரு பண்டிகையாக இருந்தது. அது மோசேயினால் ஆரம்பிக்கப்பட்டு, ஒவ்வொரு வருஷமும் மார்ச் கடைசியில் அல்லது ஏப்ரல் முதலில் கொண்டாடப்பட்டு வந்தது. சாயங்காலத்திலே ஒரு ஆட்டுக்குட்டியானது அடிக்கப்பட்டு, அது ஏகமாய் நெருப்பினால் சுடப்பட்டது; அதைப்புளிப்பில்லா அப்பத்தோடும், கசப்பான கீரையோடும் புசித்தனர். இதை வீட்டில் இருக்கிற யாவரும் சில சமயங்களில் அவர்களுடைய அயல் வீட்டுக்காரர்களும் பகிர்ந்துகொண்டனர். கசப்பான கீரையானது அவர்கள் அடிமைத்தனத்திலிருந்தபொழுது உண்டான கசந்த அநுபவத்தை ஞாபகமூட்டுகிறதாக இருந்தது; புளிப்பில்லா அப்பமானது பரிசுத்தத்தையும் பாவத்திலிருந்து கிடைக்கும் விடுதலையையும் குறிப்பிடுவதாக இருக்கின்றது. அடிக்கப்பட்ட ஆட்டுக்குட்டி பாவபரிகார பலியைக் குறிக்கின்றது. இயேசு தமது ஊழியத்தை ஆரம்பித்தபொழுது "உலகத்தின் பாவத்தைச் சுமந்து தீர்க்கிற தேவாட்டுக்குட்டி" என்று அவரைக் குறித்து சீஷர்களிடத்தில் அறிவிக்கப்பட்டது. இது வரப்போகிற இயேசுவின் மரணத்தை முன்னறிவித்த ஒரு தீர்க்கதரிசன பாடமாக இருந்தது. அவர் நம்முடைய ஸ்தானத்திலே மரித்து நம்முடைய பாவங்களுக்கான தண்டனையைத் தம்மேல் ஏற்றுக்கொள்வார். இயேசு சீஷர்களோடு இந்தக் கடைசி பஸ்காவைப் (கடைசி ஆகாரமாக) புசித்து அவர்களோடு அநேக காரியங்களைச் சம்பாஷித்துக் கொண்டிருந்தார். விசேஷமாக

அவர்களைக் குறித்துக் கூறப்பட்ட இரண்டு தீர்க்கதரிசனங்களை எடுத்துக் கூறினர்.

3. பஸ்கா பண்டிகை அவர்களுக்கு எதை நினைப்பூட்டியது ?

4. புளிப்பில்லா அப்பம் எதை ஞாபகமூட்டுவதாக இருந்தது ?

"மேய்ப்பனை வெட்டுவேன், மந்தையின் ஆடுகள் சிதறடிக்கப்படும் என்று எழுதியிருக்கிறபடி இந்த இராத்திரியே நீங்கள் எல்லாரும் என் நிமித்தம் இடறலடைவீர்கள்" சகரியா 13:7-ல் கூறியதை மத்தேயு 26, 31-ல் எடுத்துக் கூறப்பட்டது.

"ஆகிலும் வேதவாக்கியம் நிறைவேறும்படி, என் போஜனத்தைச் சாப்பிடுகிறவன் என்மேல் தன் குதிங்காலைத் தூக்கினன். அது சம்பவிக்கும்போது நானே அவரென்று நீங்கள் நம்பும்பொருட்டு, இப்பொழுதே, அது சம்பவிப்பதற்கு முன்னமே அதை உங்களுக்குச் சொல்லுகிறேன்:" இது சங்கீதம் 41 : 9-ல் கூறப்பட்டபடியே யோவான் 13 : 18, 19-ல் குறிக்கப்பட்டது.

போஜனத்திற்குப் பிறகு யூதாஸ்காரியோத்து இயேசுவைக் காட்டிக் கொடுக்கச் சென்றான்.

## கெத்செமனேயில் இயேசு

போஜனம் பண்ணினபின்பு இயேசு வழக்கமாக சீஷர்களோடு ஜெபம் பண்ண செல்லும் கெத்செமனே என்னும் இடத்திற்குச் சென்றார்.

5. இயேசு கெத்செமனே என்னும் இடத்திற்கு எதற்காகச் சென்றார்?

"பின்பு கெத்செமனே என்னும் இடத்திற்கு வந்தார்கள், அவர் தம்முடைய சீஷரை நோக்கி; நான் ஜெபித்து வருமளவும் இங்கே உட்கார்ந்திருங்கள் என்று சொல்லி பேதுருவையும், யாக்கோபையும், யோவானையும் கூட்டிக்கொண்டுபோய், திகைக்கவும் வியாகூலப்படவும் தொடங்கினர். அப்பொழுது அவர்களிடம் என் ஆத்துமா மரணத்துக்கேதுவான பெருந்துக்கங் கொண்டிருக்கிறது. நீங்கள் இங்கே தங்கி ஜெபம் பண்ணுங்கள் என்று சொல்லி சற்று அப்பால் போய் தரையிலே விழுந்து, கூடுமானல் அந்த நாழிகை தம்மைவிட்டு நீங்கிப் போகும்படி வேண்டிக்கொண்டு, அப்பா பிதாவே எல்லாம் உம்மால் ஆகும், இந்தப் பாத்திரத்தை என்னிடமிருந்து எடுத்துவிடும்; ஆகிலும் என் சித்தப்படி

யல்ல; உம்முடைய சித்தத்தின்படியே ஆகக்கடவது என்றார்," மாற்கு 14 : 32 - 36.

6. சீஷர்களை அங்கே தங்கி என்ன செய்யும்படியாக சொல்லிவிட்டு அப்பால் போனார் ?

"அவ்வேளையில் வானத்திலிருந்து ஒரு தூதன் வந்து அவர் முன் தோன்றி அவருக்குப் பலமளித்தான். அவர் வியாகுலம் நிறைந்தவராய் இன்னும் அதிக ஊக்கத்துடன் ஜெபம் செய்தார். வியர்வை இரத்தப் பெருந்துளியாய் தரையில் விழுந்தது. லூக்கா 22 : 43, 44.

"பின்பு அவர் வந்து அவர்கள் நித்திரை செய்கிறதைக்கண்டு. அவர் மறுபடியும் போய் அந்த வார்த்தைகளையே சொல்லி ஜெபித்தார். அவர் மூன்றும் தரம் வந்து இனி நித்திரை செய்து இளைப்பாறுங்கள் போதும், வேளை வந்துவிட்டது; இதோ மனுஷ குமாரன் பாவிகளுடைய கைகளில் ஒப்புக்கொடுக்கப்படுகிறார். எழுந்திருங்கள் போவோம், இதோ என்னைக் காட்டிக் கொடுக்கிறவன் வந்துவிட்டான் என்றார்." மாற்கு 14 : 37, 39, 41, 42.

## இயேசு பிடிக்கப்படுதல்

"உடனே அவர் இன்னும் பேசிக்கொண்டிருக்கையில், பன்னிருவரில் ஒருவனாகிய யூதாஸ் வந்தான்; அவனோடு பிரதான ஆசாரியரும், வேதபாரகரும், மூப்பரும் அனுப்பின திரளான ஜனங்கள் பட்டயங்களையும் தடிகளையும் பிடித்துக்கொண்டு வந்தார்கள். அவரைக் காட்டிக் கொடுக்கிறவன்: நான் எவனை முத்தமிடுவேனோ அவன்தான். அவனைப் பிடித்து பத்திரமாய்க் கொண்டு போங்கள் என்று சொல்லியிருந்தான்.

அவன் வந்தவுடனே அவரண்டையிலே சேர்ந்து, ரபீ என்று சொல்லி அவரை முத்தமிட்டான். அப்பொழுது அவர்கள் அவர்மேல் கைபோட்டு அவரைப் பிடித்தார்கள். அப்பொழுது எல்லோரும் அவரை விட்டு ஓடிப்போனார்கள்." மாற்கு 14 : 43, 45 - 50.

7. அவரைக் காட்டிக் கொடுக்கிறவன் என்ன குறிப்பு சொல்லியிருந்தான் ?

பிறகு இயேசு தம்மைப் பிடிக்க வந்த தலைமை ஆசாரியரையும் தேவாலயத்துக் காவற்படைத் தலைவரையும் மூப்பரையும் பார்த்து, "இது என்ன? கொள்ளைக்காரர்களைப் பிடிக்க வருவதுபோலப் பட்டயங்

களோடும் தடிகளோடும் புறப்பட்டு வந்திருக்கிறீர்களே! நான் நாள்தோறும் உங்களோடு தேவாலயத்தில் இருந்தேன், அப்பொழுதெல்லாம் நீங்கள் என்மேல் கை வைக்கவில்லை. அனால் இது உங்களுடைய வேளை, இது இருளின் ஆட்சி" என்றார்.

"அவர்கள் அவரைப்பிடித்து, பிரதான ஆசாரியன் வீட்டுக்கு நடத்திக்கொண்டு போனார்கள்" லூக்கா 22-52-54.

இயேசு ஆறுமுறை நியாயம் விசாரிக்கப்பட்டார்.

3. இயேசு எத்தனை முறை நியாயம் விசாரிக்கப்பட்டார்?

## இயேசு விசாரிக்கப்படுதல்

1 வேலையிலிருந்து ஓய்வு பெற்ற பிரதான ஆசாரியன் முன்பு. 2. வேலையிலிருந்த பிரதான ஆசாரியன் முன்பு. 3. யூதத் தலைவர்கள் முன்பு. 4. ரோம கவர்னரான பிலாத்துவின் முன்பு. 5. பக்கத்து மாகாணத்து கவர்னரான ஏரோதின் முன்பு. 6. பிலாத்துவின் முன்பு இரண்டாவது தடவை.

"விடியற்காலமானவுடனே பிரதான ஆசாரியரும் மூப்பரும் வேதபாரகரும் ஆலோசனை சங்கத்தார் அனைவரும் கூடி யோசனை பண்ணி இயேசுவைக் கட்டிக்கொண்டுபோய் பிலாத்துவிடம் ஒப்புக்கொடுத்தார்கள். பிலாத்து அவரைப்பார்த்து நீ யூதருடைய இராஜாவா என்று கேட்க அவர்; "ஆம் நீர் சொல்கிறபடிதான் என்றார்." மாற்கு 15 : 1, 2.

"இயேசு: என் இராஜ்யம் இவ்வுலகத்திற்குரியதலல. என் இராஜ்யம் இவ்வுலகத்திற்குரியதானால் நான் யூதரிடம் ஒப்புக்கொடுக்கப்படாதபடி என் ஆட்கள் போராடியிருப்பார்களே. ஆகவே என் இராஜ்யம் இவ்விடத்திற்குரியதல்ல என்றார். அதற்கு பிலாத்து: பின்னே நீ ராஜாதானே என்று கேட்க, இயேசு நான் இராஜா என்று நீரே சொல்கிறீர்; சத்தியத்தைக் குறித்து சாட்சி சொல்ல நான் பிறந்தேன். இதற்கென்றே இந்த உலகத்தில் வந்தேன். சத்தியத்திற்குரியவன் எவனும என் சத்தத்திற்குச் செவிசாய்க்கிறான் என்றார். பிலாத்து அவரிடம் சத்தியமாவது என்ன என்றான். இதைச் சொல்லி அவன் ...படியும் வெளியே யூதரிடம் வந்து: நான் அவனிடம் ஒரு குற்றமும் ...ன். பஸ்கா பண்டிகையில் நான் உங்களுக்கு ஒருவனை விடுதலை ... வழக்கமுண்டே; யூதரின் ராஜாவை நான் விடுதலை செய்வது ...ஷ்டமா என்று கேட்க, அவர்கள் மறுபடியும் கூச்சலிட்டு

இவனையல்ல; பரபாசையே என்றார்கள். அந்த பரபாசே கொள்ளைக்காரன்." யோவான் 18 : 36-40.

9. பிலாத்து அவரிடத்தில் ஏதேனும் குற்றத்தைக் கண்டுபிடித்தானா?

"இதைக்கேட்ட பிலாத்து இரும்பவும் அவர்களிடம்: அப்படியானால் யூதருடைய இராஜா என்று நீங்கள் சொல்லுகிறவனை நான் என்ன செய்ய வேண்டும் என்று கேட்டான். அவனைச் சிலுவையில் அறையும் என்று சத்தமிட்டுச் சொன்னார்கள். அதற்குப் பிலாத்து ஏன் என்ன பொல்லாப்பு செய்தான் என்றான். அவர்களோ, அவனைச் சிலுவையில் அறையும் என்று பின்னும் அதிகமாய்க் கூக்குரலிட்டுச் சொன்னார்கள். பிலாத்து ஜனங்களைப் பிரியப்படுத்த மனமுள்ளவனாய் பரபாசை அவர்களுக்கு விடுதலை செய்து இயேசுவையோ வாரினால் அடிப்பித்து சிலுவையில் அறையும்படி ஒப்புக்கொடுத்தான்." மாற்கு 15 : 12-15.

10. ஜனங்கள் இயேசுவை என்ன செய்தார்கள்?

11. பிலாத்து எதற்காக பரபாசை விடுதலை செய்தான்?

"என் வஸ்திரங்களைத் தங்களுக்குள் பங்கிட்டுக்கொண்டு என் உடையின்மேல் சீட்டுப்போட்டார்கள் என்கிற வேதவாக்கியம் நிறைவேற இப்படி நடந்தது" (சங்கீதம 22 : 18) யோவான் 19 : 23, 24.

"அன்றியும் அவர் அடைந்த ஆக்கினையின் முகாந்தரத்தைக் காண்பிக்கும் பொருட்டு, இவன் யூதருடைய இராஜாவாகிய இயேசு என்று எழுதி அவர் சிரசுக்கு மேல் வைத்தார்கள். அப்பொழுது அவருடைய வலது பக்கத்தில ஒருவனும் இடது பக்கத்தில ஒருவனுமாக இரண்டு கள்வர்கள் அவரோடுகூட சிலுவையில் அறையப்பட்டார்கள். அந்த வழியாய் நடந்து போகிறவர்கள் தங்கள் தலைகளைத் தூக்கி, தேவாலயத்தை இடித்து மூன்று நாட்களுக்குள்ளே கட்டுகிறவனே, உன்னை நீயே இரட்சித்துக்கொள்; நீ தேவனுடைய குமாரனானால் சிலுவையிலிருந்து இறங்கி வா என்று அவரைத் தூஷித்தார்கள். அப்படியே பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் மூப்பரும் பரியாசம் பண்ணினார்கள். மத்தேயு 27 : 37-41.

12. அவர் செய்த குற்றம் என்ன என்று எழுதினார்கள்?

**இயேசுவுக்குப் பக்கத்தில் சிலுவையில் தொங்கிக் கொண்டிருக்க**

இரு கள்ளர்களில் ஒருவன் அவரை விசுவாசித்து அவனுடைய பாவங்களிலிருந்து இரட்சிப்பைப் பெற்றுக்கொண்டான்.

"சிலுவையில் தொங்கிக்கொண்டிருந்த குற்றவாளிகளுள் ஒருவன் 'நீ கிறிஸ்துதானே; அப்படியானால் உன்னை இரட்சித்துக்கொள். எங்களையும் காப்பாற்று' என்று அவரை நிந்தித்தான். ஆனால் மற்றவன் அவனைக் கண்டித்து 'நீயும் இதே தீர்ப்பு பெற்றிருந்தும் உனக்கு கடவுள் பயம் கொஞ்சமும் இல்லையா? நாம் தண்டிக்கப்படுவது நியாயம். நாம் செய்தவற்றிற்குத் தகுந்த பலனை அடைகிறோம், இவரோ தகாத தொன்றும் செய்யவில்லையே' என்று அவனுக்குப் பதிலளித்தான். பிறகு அவன், 'இயேசுவே, நீர் உம்முடைய ராஜ்யத்தில் வரும்போது அடியேனை நினைத்தருளும்' என்றான். அவர் அவனிடம், 'நான் உறுதியாகச் சொல்லுகிறேன். இன்றைக்கு என்னுடனே பரதீசில் இருப்பாய்" என்றார். லூக்கா 23 ; 36, 37, 39, 43.

"அப்பொழுது ஏறக்குறைய மூன்று மணி நேரமாயிருந்தது, சூரியன் ஒளியற்றுப் போனதால் நாடெங்கும் இருள் சூழ்ந்திருந்தது. பின்பு இயேசு உரத்த குரலில், பிதாவே உம்முடைய கைகளில் என் ஆவியை ஒப்புவிக்கிறேன்" என்று சொல்லி ஆவியை விட்டார். அப்பொழுது தேவாலயத்தின் திரை இரண்டாகக் கிழிந்தது." லூக்கா 23 : 44 - 46.

நூற்றுக்கதிபதியும், அவனோடே கூட இயேசுவைக் காவல் காத்திருந்தவர்களும் பூமியதிர்ச்சியையும் சம்பவித்த காரியங்களையும் கண்டு மிகவும் பயந்து மெய்யாகவே இவர் தேவனுடைய குமாரன் என்றார்கள்" மத்தேயு 27 : 54.

13. சம்பவித்த காரியங்களைக் கண்ட நூற்றுக்கதிபதி கூறியது என்ன?

"அது ஆயத்த நாள்: அடுத்த நாள் விசேஷித்த ஓய்வு நாள். அந்த ஓய்வு நாளில் உடல்கள் சிலுவையில் இருக்காதபடி, காலெலும்புகளை முறித்து அவைகளை எடுத்துவிட யூதர்கள் பிலாத்துவிடம் கேட்டுக் கொண்டார்கள். அந்தப்படியே போர்ச் சேவகர்கள் போய் அவரோடு அறையப்பட்டிருந்தவர்களில் ஒருவனுடைய காலெலும்புகளையும் மற்றவனுடைய காலெலும்புகளையும் முறித்தார்கள். அவர்கள் இயேசுவினிடத்தில் வந்தபோதோ அவர் மரித்திருக்கிறதைக் கண்டார்கள். ஆகையால் அவர் காலெலும்புகளை முறிக்கவில்லை. ஆகிலும் போர்ச் சேவகர்களில் ஒருவன் அவர் விலாவில் ஈட்டியால் குத்தினான். உடனே ரத்தமும் தண்ணீரும் வெளிப்பட்டன." யோவான் 19 : 31 - 34.

14. போர்ச் சேவகர்கள் ஏன் அவருடைய கால்எலும்புகளை முறிக்க வில்லை ?

இவரே தேவகுமாரன், அவர்களோ நித்திய மரணத்திலிருந்து இரட்சிப்பைப் பெற்றுக்கொள்ள வேண்டிய பாவிகள், அவர்களுக்காகவே அவர் மரித்துக் கொண்டிருந்தார். அவர் வானத்திலிருந்து அக்கினியை வரவழைத்து அவர்களையெல்லாம் அழித்திருக்கக்கூடும். ஆனால் அவரோ " பிதாவே இவர்களுக்கு மன்னியும், தாங்கள் செய்கிறது இன்னதென்பதை அறியாதிருக்கிறார்கள்" என்று ஜெபித்தார்.

15. சத்துருக்காக இயேசு எவ்வாறு ஜெபித்தார் ?

பாடம் பத்து

## உயிர்த்தெழுந்த இயேசு

### இயேசு அடக்கம் செய்யப்படுதல்

" அரிமத்திய ஊரானாகிய யோசேப்பு என்னும் ஒருவனிருந்தான். இவன் கனம் பொருந்திய ஆலோசனைச் சங்கத்தான். கடவுள் ராஜ்யம் வரக் காத்திருந்தவன். சாயங்காலமானபோது ஓய்வு நாளுக்கு முந்தின ஆயத்த நாளானதால், இவன் பிலாத்துவிடம் துணிந்துபோய், இயேசுவின் சரீரத்தைக் கேட்டான். அவர் இதற்குள் மரித்துப் போனாரோ என்று பிலாத்து ஆச்சரியப்பட்டு, நூற்றுக்கதிபதியை வரவழைத்து, அவர் மரித்து நேரமாயிற்றோ என்று விசாரித்தான்." மாற்கு 15 : 42 - 44.

1. பிலாத்து ஏன் ஆச்சரியப்பட்டான் ?

அவர் மரித்துவிட்டார் என்பதை அவர்கள் அறிந்திருந்தனர். இருப்பினும் அதை உறுதிப்படுத்திக் கொள்வதற்காக போர்ச் சேவகர்களில் ஒருவன் அவர் விலாவில் ஈட்டியால் குத்தினான்,

2. அவர் மரித்துவிட்டார் என்று போர்ச் சேவகர்கள் எப்படி உறுதிப் படுத்தினார்கள் ?

" நூற்றுக்கதிபதியினாலே அதை அறிந்துகொண்டு உடலை யோசேப்பினிடம் கொடுத்தார். அவன் போய் மெல்லத் துணியை வாங்கிக்கொண்டு வந்து அவரை இறக்கி, அந்தத் துணியிலே சுற்றி கற்பாறையில் வெட்டியிருந்த கல்லறையிலே ஒரு கல்லை உருட்டி வைத்

தான்; அவரை வைத்த இடத்தை மகதலேனா மரியாளும் யோசேப்பின் தாயாகிய மரியாளும் பார்த்துக்கொண்டிருந்தார்கள்." மாற்கு 15 : 45 - 47.

இயேசுவின் விரோதிகள் பிலாத்துவினிடத்தில் கூடி வந்து அவருடைய சரீரத்தை யாராவது களவாடிக்கொண்டுபோய், மரித்தோரிலிருந்து இயேசு எழுந்தார் என்று சொல்லாதபடிக்கு கல்லறையைப் பத்திரப்படுத்தும்படி காவல் சேவகரை அனுப்பும்படி உத்தரவு பெற்றனர்.

3. இயேசு உயிர்த்தெழுந்தார் என்று சொல்லாதபடி அவருடைய விரோதிகள் என்ன செய்தார்கள்?

இயேசு திரும்பவும் ஜீவனைப் பெற்றுக்கொள்ளுதல்

அப்பொழுது பூமி மிகவும் அதிரும்படி, கர்த்தருடைய தூதன் வானத்திலிருந்து இறங்கி வந்து, வாசலிலிருந்த கல்லைப்புரட்டித் தள்ளி அதன்மேல் உட்கார்ந்தான். அவனுடைய ரூபம் மின்னல் போலவும் அவனுடைய வஸ்திரம் உறைந்த மழையைப் போல வெண்மையாகவும் இருந்தது: காவலாளர் அவனுக்குப் பயந்ததினால் திடுக்கிட்டுச் செத்தவர்கள் போலானார்கள்.

"காவல் சேவகரில் சிலர் நகரத்துள்ளே வந்து, நடந்த யாவற்றையும் பிரதான ஆசாரியருக்கு அறிவித்தார்கள். இவர்கள் மூப்பராலே கூடிவந்து ஆலோசனை பண்ணி, சேவகருக்கு வேண்டிய பணத்தைக் கொடுத்து, நாங்கள் நித்திரை பண்ணுகையில், அவனுடைய சீஷர்கள் இராத்திரியிலே வந்து, அவனைக் களவாடிக் கொண்டுபோய்விட்டார்கள் என்று சொல்லுங்கள்." மத்தேயு 23 : 24 - 11 - 13.

திருக்கட்டளைக்கிணங்க அவர்கள் ஓய்வு நாளில் ஓய்ந்திருந்தார்கள் அவர்கள் வாரத்தின் முதலாம் நாள் விடியற்காலத்தில் தாங்கள் ஆயத்தம் செய்திருந்த சுகந்த வர்க்கங்களை எடுத்துக்கொண்டு கல்லறைக்கு வந்தார்கள். வந்ததும் கல்லறையிலிருந்து கல் புரட்டித் தள்ளப்பட்டிருப்பதைக் கண்டார்கள்; அவர்கள் உள்ளே நுழைந்தபோதோ ஆண்டவராகிய இயேசுவின் உடலைக் காணவில்லை. அதைக் குறித்து அவர்கள் மனக் கலக்கமுற்று நிற்கையில் ஒளிவீசும் ஆடையணிந்த இருவர் அருகில் திடீரென்று வந்து நின்றனர். அந்தப் பெண்கள் பயந்துபோய் குனிந்து தரையைப் பார்த்துக் கொண்டிருக்கையில். அந்த இருவரும் அவர்களை நோக்கி, 'உயிரோடிருக்கிறவரை இறந்தோரிடத்தில் தேடுகிறதேன்? அவர் இங்கே இல்லை. அவர் உயிர்த்தெழுந்துவிட்டார். அவர் கலிலேயாவிலிருந்த போதே உங்களுக்குச் சொன்னதை நினைவுபடுத்திப் பாருங்கள். மனித குமாரன் பாவிகளான மனிதர் கைகளில் ஒப்புக்

கொடுக்கப்பட்டு சிலுவையில் அறையுண்டு, மூன்றாம் நாள் எழுந்திருக்க வேண்டுமென்று சொன்னாரே" என்றார்கள். அப்பொழுது அவர்கள் அவருடைய வார்த்தைகளை நினைவுபடுத்திக்கொண்டு கல்லறையை விட்டுத் திரும்பிப்போய், இந்தக் காரியங்கள் எல்லாவற்றையும் பதினொருவருக்கும் மற்றயாவருக்கும் அறிவித்தார்கள். இந்த வார்த்தைகள் வீண் வார்த்தைகளாக அவர்களுக்குத் தோன்றியதால் அவர்கள் அப்பெண்களை நம்பவில்லை." லூக்கா 24 : 1 - 9, 11.

4. சீஷர்கள் அவரைக் களவாடிக் கொண்டுபோய் விட்டார்கள் என்று சொல்லும்படி சேவகர்களுக்கு என்ன கொடுத்தார்கள்?

5. அவர் உயிர்த்தெழுந்தார் என்ற வார்த்தை சீஷர்களுக்கு எப்படித் தோன்றியது?

ஆசாரியர்கள் காவல் சேவகர்களை நம்பினார்கள். அவர்களுக்கு வேண்டிய பணத்தைக் கொடுத்து பொய் சொல்ல வைத்தனர். என்ன நடந்தது என்று ஸ்திரீகள் வந்து அறிவித்த பொழுது அவர்கள் அந்த ஸ்திரீகளின் வார்த்தைகள் வீண் வார்த்தைகள் என்று எண்ணினர். அவர்களைப் பொறுத்தமட்டில் இயேசு அவர்களுக்கு மரித்தவராகவே இருந்தார். அவரைத் திரும்பக் காண்போம் என்று அவர்கள் நினைக்கவில்லை.

## இயேசு சீஷர்களுக்குக் காட்சியளித்தல்

அன்று இயேசு தாமே தம்முடைய நண்பர்களுக்கு ஐந்து முறை காட்சியளித்தார். குறைந்தது பதினெட்டுபேர் அவரைக் கண்டார்கள் அவர் ஐந்தாவது முறையாக காட்சியளித்த பொழுது அங்கு பத்து சீஷர்களும் இருந்தனர்.

"அவர்கள் இவற்றைப் பேசிக்கொண்டிருக்கையில், இயேசு தாமே அவர்கள் நடுவில் வந்து நின்று, அவர்களைப் பார்த்து, 'உங்களுக்கு சமாதானம்' என்றார். அவர்கள் திடுக்கிட்டுப் பயந்துபோய் ஓர் ஆவியைக் காண்பதாக நினைத்தார்கள். அப்பொழுது அவர் அவர்களைப் பார்த்து, ஏன் கலங்குகிறீர்கள்? உங்கள் உள்ளத்தில் சந்தேகம் எழுவானேன்? என் கைகளையும் கால்களையும் பாருங்கள். நான் தான் என்னை தொட்டுப் பாருங்கள். எனக்கு மாம்சமும் எலும்புகளும் இருப்பதை நீங்கள் காண்கிறீர்களே: இவை ஓர் ஆவிக்கு இல்லையே" என்று சொல்லி தம்முடைய கைகளையும் கால்களையும் அவர்களுக்கு காட்டினார்." லூக்கா 24 ; 36 - 40.

9. உயிர்த்தெழுந்த இயேசு மாம்சமும் எலும்புகளும் உடையவராக இருந்தாரா?

இயேசு வந்து நடுவே நின்று உங்களுக்குச் சமாதானம் என்றார். அவர் இதைச் சொல்லி தமது கைகளையும் விலாவையும் அவர்களுக்குக்

காண்பித்தார். சீஷர்: ஆண்டவரைக் கண்டு சந்தோஷப்பட்டார்கள். இயேசு மறுபடியும் உங்களுக்குச் சமாதானம்: பிதா என்னை அனுப்பினது போல நானும் உங்களை அனுப்புகிறேன் என்று சொல்லி அவர்கள் மேல் ஊதி, பரிசுத்தாவியைப் பெற்றுக்கொள்ளுங்கள். எவர்களுடைய பாவங்களை நீங்கள் மன்னிக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்பட்டிருக்கும். அவர்களுடைய பாவங்களை நீங்கள் மன்னியாதிருக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படாதிருக்கும் என்றார்.

தோமாவின் அவிசுவாசம்

பன்னிருவரில் ஒருவனாகிய திதிமு எனப்பட்ட தோமாவோ இயேசு வந்திருந்தபோது அவர்களோடிருக்கவில்லை. ஆகவே மற்ற சீஷர்: ஆண்டவரைக் கண்டோம் என்று அவனுக்குச் சொன்னார்கள். அவனோ அவர்களிடம் அவருடைய கைகளில் ஆணிகளினாலுண்டான தழும்பை நான் பார்த்து ஆணியிருந்த இடத்திலே என் விரலைவிட்டு, என் கையை அவருடைய விலாவிலே வைத்தாலொழிய நம்பவே மாட்டேன் என்றான்.

"மறுபடியும் எட்டு நாளைக்குப் பின் அவர் சீஷர்கள் முன்போலவே வீட்டிற்குள் இருந்தாகள்; தோமாவும் அவர்களோடிருந்தான். கதவுகள் பூட்டியிருந்தும இயேசு நடுவே நின்று: உங்களுக்குச் சமாதானம் என்றார். பின்பு அவர் தோமாவைப் பார்த்து: நீ உன் விரலை இங்கே நீட்டி என் கைகளைப் பார். உன் கையை நீட்டி என் விலாவிலே வை. அவிசுவாசமுள்ளவனாயிராமல் விசுவாசமுள்ளவனாயிரு என்றார். இதைக் கேட்ட தோமா அவரிடம் என் ஆண்டவரே என் தேவனே என்றான், அதற்கு இயேசு: தோமாவே, நீ என்னைக்கண்டதிலே நம்பினாய்! காணாமலே நம்புகிறவர்கள் பாக்கியவான்கள் என்றார்கள்." யோவான் 20:20-29.

7 எப்படிப்பட்ட நம்பிக்கையுடையவர்கள் பாக்கிவான்கள்?

இயேசுவானவர் பரலோகத்திற்கு எடுத்துக்கொள்ளப்படுவதற்கு முன்பு பத்து முறை தம்முடைய நண்பர்களுக்குக் காட்சியளித்ததாகவும் அதில் ஒரு முறை 500 பேர்களுக்கும் மேலானவர்களுக்கு ஒரே சமயத்தில் காட்சியளித்ததாகவும் வேதாகமம் கூறுகிறது.

## உயிர்த்தெழுந்த இயேசு; நிறைவேறின தீர்க்கதரிசனங்கள்

ஏசாயா பழைய ஏற்பாட்டிலே மேசியா வந்து ஜனங்களுடைய பாவங்களுக்காக மரிப்பார் என்று எழுதியிருந்தார்.

"நம்முடைய மீறுதல்களினிமித்தம் அவர் தொகுக்கப்பட்டார் நமக்கு சமாதானத்தை உண்டுபண்ணும் ஆக்கினை அவர்மேல் வந்து அவருடைய தழும்புகளால் குணமாகிறோம்."

1. இயேசு எதற்காகக் காயப்பட்டு, நொறுக்கப்பட்டார்?

,,நீங்கள் புறப்பட்டுப்போய், சகல ஜாதிகளையும் சீஷராக்கி பிரதா குமாரன், பரிசுத்த ஆவியின் நாமத்தினாலே அவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்து, நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைகொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள். இதோ உலகத்தின் முடியும்பரியந்தம் சகல நாட்களுடன் நான் உங்களுடனேகூட இருக்கிறேன் என்றார்." மத்தேயு 28:19,20

4. அவர்களோடு எதற்காகக் காத்திருங்கள் என்று கட்டளையிட்டார்?

''ஆகையால் நீங்கள் எருசலேமைவிட்டுப் போகாமல் என்னிடத்தில் கேள்விப்பட்ட பிதாவின் வாக்குத்தத்தம் நிறைவேறகாத்திருங்கள் என்று கட்டளையிட்டார். பரிசுத்த ஆவி உங்களிடத்தில் வரும்போது, நீங்கள் பலனடைந்து எருசலேமிலும், யூதேயா முழுவதிலும், சமாரியாவிலும்' பூமியின் கடைசிபரியந்தமும் எனக்கு சாட்சிகளாய் இருப்பீர் என்றார். இவைகளை அவர் சொன்னபின்பு, அவர்கள் பார்த்துக்கொண்டிருக்கையில் உயர எடுத்துக்கொள்ளப்பட்டார். அவர்கள் கண்களுக்கு மறைவாக ஒரு மேகம் அவரை எடுத்துக் கொண்டது, அவர் போகிற போது அவர்கள் வானத்தை அண்ணாந்து பார்த்துக்கொண்டிருக்கையில் இதோ வெண்மையான வஸ்த்திரந்தரித்தவர்கள் இரண்டுபேர் அவர்கள் அருகே நின்று கலிலேயராகிய மனுஷரே, நீங்கள் ஏன் வானத்தை அண்ணார்ந்துபார்த்து நிற்கிறீர்கள்? உங்களிடத்தினின்று வானத்தில் எடுத்துக்கொள்ளப்பட்ட இந்த இயேசுவானவர் எப்படி உங்கள் கண்களுக்கு முன்பாக வானத்துக்கு எழுந்தருளிப்போனாரோ, அப்படியே மறுபடியும் வருவார் என்றார்கள்." அப். 1:5, 8-11.

### திருச்சபை ஆரம்பமான அந்த நாள்

இயேசுவானவர் பரலோகத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்ட பிற்பாடு சீஷர்களும் மற்றவர்களும் எருசலேமில் ஜெபத்தில் தரித்திருந்தனர். ஒரு மேல்வீட்டில் ஜெபிப்பதர்க்காக அடிக்கடி கூடி வந்திருந்தனர். இயேசுவின் தாயாகிய மரியாளும் இயேசுவின் சகோதரரும் அவர்களுடன் இருந்தனர். ஏறக்குறைய 120 பேர் அங்குக்கூடியிருந்தனர். இயேசுவானவர் எடுத்துக்கொள்ளப்பட்டு பத்து தினங்களானபின்பு அவர்கள் யாவரும் ஜெபித்துக்கொண்டிருந்தபோது:

''அப்போழுது பலத்த காற்று அடிக்கிற முழக்கம்போல வானத்திலிருந்து சடுதியாய் ஒரு முழக்கமுண்டாகி அவர்கள் உட்கார்ந்திருந்த வீடு முழுவதையும் நிரப்பிற்று; அல்லாமலும் அக்கினி மயமான நாவுகள் போல பிரிந்திருக்கும் நாவுகள் அவர்களுக்குக் காணப்பட்டு அவர்கள் ஒவ்வொருவர் மேலும்வந்து அமர்ந்தது. அவர்களெல்லாரும் பரிசுத்த ஆவியினால் நிரப்பப்பட்டு ஆவியானவர் தங்களுக்கு தந்தருளின வரத்தின்படியே வெவ்வேறு பாஷைகளிலே பேசத்தொடங்கினார்கள்.

5. பரிசுத்த ஆவியினால் நிரப்பப்பட்டவர்கள் என்ன செய்தார்கள்?

"வானத்தின் கீழிருக்கிற சகல தேசத்தாரிலுமிருந்து வந்த தேவ பக்தியுள்ள யூதர்கள் அப்பொழுது எருசலேமிலே வாசம் பண்ணினார்கள். அந்தச் சத்தம் உண்டானபோது திரளான ஜனங்கள் கூடிவந்து தங்கள் தங்கள் பாஷையிலே அவர்கள் பேசுகிறதை அவர்கள் கேட்டபடியினாலே கலக்கமடைந்தார்கள். எல்லோரும் பிரமித்து ஆச்சரியப்பட்டு ஒருவரை ஒருவர் பார்த்து: இதோ பேசுகிற இவர்களெல்லோரும் கலிலேயரல்லவா? இப்படியிருக்க, நம்மில் அவரவர்களுடைய ஜென்ம பாஷையிலேயே இவர்கள் பேசக் கேட்கிறோமே இதெப்படி? எல்லோரும் சந்தேகப்பட்டு என்னமாய் முடியுமோ? என்று ஒருவரோடொருவர் சொல்லிக் கொண்டார்கள். மற்றவர்களோ; இவர்கள் மதுபானத்தினால் நிறைந்திருக்கிறார்களென்று பரியாசம் பண்ணினார்கள்" அப்போஸ்தலர் 2:2-8, 12, 13.

எருசலேமில் இதுவரை இப்படிப்பட்ட சம்பவம் நடந்ததில்லை. இது ஒரு பெரிய பண்டிகையின் சமயமாக இருந்தபடியால் அந்நாட்களில் அறியப்பட்ட உலகமெங்குமுள்ள யூதர்கள் அங்கு கூடியிருந்தனர். என்ன நடந்தது என்பதைக் கூடியிருந்த ஜனக்கூட்டத்திற்கு அறிவிக்கபேதுரு எழுந்து நின்றான். முதலாவது கிறிஸ்தவ பிரசங்கத்தை பரிசுத்தாவியின் வல்லமையால் தைரியமாகப் பிரசங்கித்தான். அவன் உரைத்தது:

6. முதலாம் கிறிஸ்தவ பிரசங்கத்தைச் செய்தது யார்?

"அப்பொழுது பேதுரு பதினொருவரோடும் கூட நின்று அவர்களை நோக்கி உரத்த சத்தமாய் யூதர்களே எருசலேமில் வாசம் பண்ணுகிற ஜனங்களே நீங்களெல்லாரும் அறிந்துகொள்வீர்களாக. என் வார்த்தைகளுக்குச் செவி கொடுங்கள், நீங்கள் நினைக்கிறபடி இவர்கள் வெறி கொண்டவர்களல்ல, பொழுது விடிந்து மூன்றாம்மணி வேளையாயிருக்கிறதே. தீர்க்கதரிசியாகிய யோவேலினால் உரைக்கப்பட்டபடியே இது நடக்கிறது."

7. ஆவியை ஊற்றுவேன் என்று உரைத்த யாருடைய தீர்க்கதரிசனம் நிறைவேறினது?

"கடைசி நாட்களில் நான் மாம்சமான யாவர் மேலும் என் ஆவியை ஊற்றுவேன். அப்பொழுது கர்த்தருடைய நாமத்தை தொழுது கொள்ளுகிறவனெவனோ அவன் இரட்சிக்கப்படுவான், இஸ்ரவேலரே நான்

சொல்லும் வார்த்தையைக் கேளுங்கள். நீங்கள் அறிந்திருக்கிறபடி நசரேயனாகிய இயேசுவைக்கொண்டு தேவன் உங்களுக்குள்ளே பலத்த செய்கைகளையும், அற்புதங்களையும், அடையாளங்களையும் நடப்பித்து, அவைகளினாலே அவரை உங்களுக்கு வெளிப்படுத்தினார். அப்படியிருந்தும், தேவன் நிர்ணயித்திருந்த ஆலோசனையின்படியேயும் அவருடைய முன்னறிவிப்பின்படியேயும் ஒப்புக்கொடுக்கப்பட்ட அந்த இயேசுவை நீங்கள் பிடித்து அக்கிரமக்காரருடைய கைகளினாலே சிலுவையில் ஆணியடித்துக் கொலை செய்தீர்கள். தேவன் அவருடைய மரண உபாதைகளின் கட்டை அவிழ்த்து, அவரை எழுப்பினார், அவர் மரணத்தினால் கட்டப்பட்டிருக்கக் கூடாதிருந்தது. ஆகையினால், நீங்கள் சிலுவையில் அறைந்த அந்த இயேசுவையே தேவன் ஆண்டவரும் கிறிஸ்துவுமாக்கினாரென்று இஸ்ரவேல் குடும்பத்தார் யாவரும் நிச்சயமாய் அறியக்கடவர்களென்றான். இதை அவர்கள் கேட்டபொழுது, இருதயத்திலே குத்தப்பட்டார்களாகி பேதுருவையும் மற்ற அப்போஸ்தலர்களையும் பார்த்து: சகோதரரே, நாங்கள் என்ன செய்ய வேண்டுமென்றார்கள், பேதுரு அவர்களை நோக்கி: நீங்கள் மனந்திரும்பி, ஒவ்வொருவரும் பாவமன்னிப்புக்கென்று இயேசுகிறிஸ்துவின் நாமத்தினாலே ஞானஸ்நானம் பெற்றுக்கொள்ளுங்கள். அப்பொழுது பரிசுத்த ஆவியின் வரத்தைப் பெறுவீர்கள்! அப்போஸ்தலர் 2:14-17,21-24,36-38.

8. பாவமன்னிப்புக்கென்று பேதுரு என்ன செய்ய வேண்டுமென்று கூறினார்?

இயேசு அவர்களுக்கு வாக்குத்தத்தம் பண்ணினபடியே தேவன் தம்முடைய பரிசுத்த ஆவியை சிஷர்களுக்கு அருளினார். அவர்கள் பரிசுத்த ஆவியின் வல்லமையினால் நிரப்பப்பட்டார்கள். இந்த வல்லமையில்லாதிருந்த பொழுது பேதுருவும் மற்ற சிஷர்களும் இயேசுவைப் பிடிக்க வந்த பொழுது அவரை விட்டு ஓடினர். இப்பொழுது ஜனக்கூட்டத்தை நோக்கி, இயேசு மரித்தோரிலிருந்து உயிரோடெழுந்தார் என்று தைரியமாக உரைத்து, மனந்திரும்பி, ஒவ்வொருவரும் பாவமன்னிப்புக்கென்று இயேசு கிறிஸ்துவின் நாமத்தினாலே ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ள வேண்டுமென்று கூறினார்.

சில நாட்களுக்குப் பிறகு பேதுருவும் யோவானும் தேவாலயத்திற்கு ஜெபிப்பதற்குப் போய்க்கொண்டிருந்த பொழுது தேவாலய வாசலண்டையிலேதன் தாயின் வயிற்றிலிருந்து சப்பாணியாய் பிறந்த ஒருவன் பிச்சை கேட்டுக்கொண்டிருந்தான்.

"அப்பொழுது பேதுரு வெள்ளியும் பொன்னும் என்னிடத்தி லில்லை. என்னிடத்திலுள்ளதை உனக்குத் தருகிறேன். நாசரேயனாகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தினாலே நீ எழுந்து நட என்று சொல்லி வலது கையினால் அவனைப் பிடித்து தூக்கிவிட்டான். அவன் குதித் தெழுந்து நின்று நடந்தான். நடந்து துதித்துக்கொண்டு அவர்களுடனே கூட தேவாலயத்திற்குள் பிரவேசித்தான்." அப்போஸ்தலர் 3 : 6 - 8.

9. யாருடைய நாமத்தினாலே சப்பாணி குணமாக்கப்பட்டான்?

இந்த அற்புதம் அநேகரை பிரமிக்கப்பண்ணினபடியால் பேதுருவையும் யோவானையும் பிடித்துக் காவலில் போடப்பட்டு பின்பு பிரதான ஆசாரியர் முன்னிலையில் நிறுத்தி எந்த வல்லமையினால் இதைச் செய்கிறீர்கள் என்று கேட்கப்பட்டனர். பேதுரு: பரிசுத்தாவியின் வல்லமையினால் என்று அந்தத் தலைவர்களுக்குப் பதிலளித்தான்.

"அவராலேயன்றி வேறொருவராலும் இரட்சிப்பு இல்லை. நாம் இரட்சிக்கப்படும்படிக்கு வானத்தின் கீழெங்கும் மனுஷர்களுக்குள்ளே அவருடைய நாமமேயல்லாமல் வேறொரு நாமம் கட்டளையிடப்படவுமில்லை" அப்போஸ்தலர் 4 : 11

"கர்த்தராகிய இயேசுவை நீ உன் வாயினாலே அறிக்கையிட்டு, தேவன் அவரை மரித்தோரிலிருந்து எழுப்பினாரென்று உன் இருதயத்திலே விசுவாசித்தால் இரட்சிக்கப்படுவாய்." ரோமர் 10 : 9, 17.

10. இரட்சிக்கப்படும்படி நாம் என்ன செய்ய வேண்டும்?

நீங்கள் விரும்பினால் கீழ்க்காணும் இந்த ஜெபத்தைச் செய்யவும்.

எங்கள் பரலோக பிதாவே. இயேசுவின் நாமத்தில் என்னுடைய பாவங்களை மன்னிக்கும்படியாக உம்மிடத்தில் வேண்டிக்கொள்கிறேன். உம்மை ஆவியோடும் உண்மையோடும் தொழுதுகொள்ள பரிசுத்தாவியாகிய ஈவை எனக்குத் தந்தருளும். ஆவிக்குரிய இருளிலிருந்து உலகத்தின் ஒளியாகிய இயேசுவின் மூலமாக எனக்கு விடுதலையை அருளும். இயேசுவின் நாமத்திலே நன்றியுடன் வேண்டிக்கொள்கிறேன் எங்கள் பிதாவே' ஆமென்.

ஃ

